4 பக்கங்கள் 15 காசுகள்




# தீக்கதிர்

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) நாளிதழ்

கதிர் 12 மதுரை 19—1—74 சனி மலர் 16

பதிவு எண்: எம். 8798


## தென் மண்டல பீடித் தொழிலாளர்கள் மாநாடு

இம் மாதம் 26, 27 தேதிகளில் ஆந்திரா, மைசூர், கேரளா, தமிழ் நாடு மாநிலங்களிலுள்ள பீடித் தொழிலாளர்கள் மாநாடு கேரளத்தில் தலைச்சேரியில் நடைபெறுகிறது.

தோழர்கள் ஏ.கே.கோபாலன், பி.ராமமூர்த்தி, ஆர். உமாநாத் ஆகியோர் கலந்துக் கொள்கின்றனர்.

27-1-74-ந் தேதி மிகப்பெரும் ஊர்வலமும், பொதுக்கூட்டமும் நடைபெறும்.




### முதலமைச்சர் உத்தரவு கலெக்டருக்கு தெரியாதாம்

# குமரி அரசு போக்குவரத்து ஊழியருக்கு வேலை தர மறுப்பு

நாகர்கோவில், ஜன. 16—

**போராடும் குமரி மாவட்ட அரசு போக்குவரத்து ஊழியர்களுக்கு நிர்வாகம் வேலை கொடுக்க மறுக்கிறது. அண்மையில் முதலமைச்சரும், போக்குவரத்து அமைச்சரும் வேலை நீக்கம் செய்யப்பட்டவர்களுக்கு வேலை கொடுக்க உத்தரவிட்டிருப்பதாகவும் வழக்குகள் வாபஸ் பெறப்பட்டதாகவும் பகிரங்கமாக அறிவித்தார்கள். அரசாங்க செய்தித்துறையே இந்தச் செய்தியை வெளியிட்டுள்ளது.**

**எனினும் முதலமைச்சர் உத்தரவு தனக்குத் தெரியாது என்று மாவட்டக் கலெக்டர் கூறுகிறார்.**

**போக்குவரத்துத் தொழிலாளர்கள், பழிவாங்கப்படும் நிலைமை நீடிப்பதை எதிர்த்து தொடர்ந்து போராடுகிறார்கள்.**

குமரி அரசுப் போக்குவரத்துத் தொழிலாளர் போராட்டம் பற்றி அண்மையில் போக்குவரத்து அமைச்சர் ராமச்சந்திரன் வெளியிட்ட தகவல் அனைத்துப் பத்திரிகைகளிலும் வெளியாகியிருந்தது. தமிழ்நாடு அரசின் மக்கள் தொடர்புத்துறையும் இது பற்றிய செய்தியை அனைத்து பத்திரிகைகளுக்கும் அனுப்பியிருந்தது. அச்செய்திக் குறிப்பை அப்படியே கீழே தருகின்றோம்.

நாள் 7—1—1974 செய்திக்குறிப்பு எண்-1

**கன்னியாகுமரியில் வேலை நீக்கம் செய்யப்பட்ட போக்குவரத்துத் தொழிலாளர்களுக்கு மீண்டும் வேலையளிக்கப்படும் அமைச்சர் அறிவிப்பு**

தமிழ்நாடு அரசு போக்குவரத்துத்துறையில் கன்னியாகுமரி பிரிவில் தற்காலிக வேலை நீக்கத்தில் உள்ள 225 தொழிலாளர்களையும் இந்த மாதம் 4.ந்தேதி பாஞ்சாலங்குறிச்சியில் நடைபெற்ற கட்டபொம்மன் போக்குவரத்துக் கழக துவக்க விழாவின்போது தொழிலாளர்கள் கேட்டுக் கொண்டதற்கிணங்க மாண்புமிகு முதலமைச்சர் அவர்கள் வழங்கிய உறுதி மொழியின் அடிப்படையில் திரும்பவும் வேலைக்கு எடுத்துக் கொள்வதென்றுமுடிவு செய்யப்பட்டுள்ளது. அவர்கள் மீதுஉள்ள வழக்குகள் திரும்பப்பெறப்படும். அவர்களுக்கு இதுவரை வழங்கப்படாமல் நிறுத்தி வைக்கப்பட்டிருந்த போனஸ் தொகை வழங்கப்படும். அவர்கள் தற்காலிக வேலை நீக்கத்தில் இருந்த நாட்கள் விடுமுறையாக கணக்கிடப்படும். இந்த முடிவுகள் இந்த மாதம் 5-ந் தேதி திருநெல்வேலியில் போக்குவரத்துத்துறை அதிகாரிகளோடும் தொழிலாளர் பிரதிநிதிகளோடும் கலந்து பேசி எடுக்கப்பட்டதென்பதை மாண்புமிகு போக்குவரத்துதுறை அமைச்சர் திரு எஸ். ராமச்சந்திரன் அறிவிக்கிறார்.

—தமிழ்நாடு அரசுசெய்தி மக்கள் தொடர்புத்துறை இயக்குனரால் வெளியிடப்பெறுவது.

—கையொப்பம்
தேதி

**உண்மையில் நடப்பதென்ன?**

இதைப் பத்திரிகையில் படிக்கும் அனைவரும் போராட்டம் முடிந்துவிட்டதாகவும் தொழிலாளர்கள் திரும்பி வேலைக்கு எடுக்கப்பட்டதாகவுமே நம்புவர்-அப்படியே நம்பி தொழிலாளர்களும் வேலைக்குச் சென்றனர். ஆனல் அவர்களுக்கு வேலை வழங்கப்படவில்லை. கோர்ட்டுகளுக்குச் சென்றனர். கேஸ்கள் வாபஸ் வாங்கப்படவில்லை.

இலாகா அமைச்சர் அறிவிப்பை அதிகாரிகளிடம் தொழிலாளர்கள் தெரிவித்தனர். அதற்கு அதிகாரிகள் கொடுத்தபதில் "பத்திரிகைகளில் வரும் செய்திகளை நாங்கள் எப்படி நம்புவது உங்களுக்கு வேலை வேண்டுமானல் மன்னிப்புக் கடிதம் எழுதித் தர வேண்டும். அப்படியானலும் கூட தொழிலாளர்களின் பழைய ரிக்கார்டுகளை பார்த்து தான் வேலை தரப்படும்.

வழக்குகளில் சேர்க்கப்பட்டவர்களை வேலைக்கு எடுத்துக் கொள்ள மாட்டோம். அதற்குரியஉத்தரவு வரவில்லை. வந்த பின்னர் தான் வேலைக்கு எடுப்பது பற்றி முடிவு செய்யப்படும்"

இதுகுறித்து தொழிற் சங்க தலைவர்கள் குமரி மாவட்ட கலெக்டரிடம் கேட்டபோது அவர் அளித்த பதில், "பத்திரிகைகளில் செய்தி வந்திருக்கலாம் எனக்கு எதுவும் தெரியாது வழக்குகள் வாபஸ் வாங்க முடியாது" என்பதுதான்.

எப்படியிருக்கிறது! மாநில முதலமைச்சரின் உறுதி மொழி? இப்படி இலாகா அமைச்சர்சொன்னவிஷயம்—பத்திரிகைகள் மட்டுமல்ல அரசின்செய்தித்துறைகூட வெளியிட்ட தகவல் இலாகா அதிகாரிகளுக்கும் மாவட்ட ஆட்சியாளருக்கும் தெரியாதாம்.

**போராட்டம் தொடர்கிறது**

குமரி மாவட்ட அரசுப் போக்கு வரத்துத்துறை தொழிலாளர்கள் இன்னும் போராட்டக் களத்திலேயே உள்ளனர். இவர்களில் 225 பேர் மீது கிரிமினல் வழக்குகள் போடப்பட்டுள்ளன. 80 பேர் தற்காலிகத் தொழிலாளர்கள். இவர்கள் டிஸ்மிஸ் செய்யப்பட்டுள்ளனர்.

அமைச்சரின் அறிக்கைகளுக்கும், அதிகாரிகளின் மாவட்டக்கலெக்டரின் பதிலுக்கும் உள்ள முரண்பாடுகளைப் பார்த்தால் இது தொழிலாளர்களை பழிவாங்கும் திட்டமிட்ட நடவடிக்கை என்பது மட்டுமல்ல வெந்த புண்ணில் வேல் பாய்ச்சுவது போலவும், பரிகசிப்பது போலவும் உள்ளது என்பது புலனுகிறது.

**வழக்குகள் வாபசில்லை**

போக்குவரத்துத் தொழிலாளர்கள் மீது தொடுக்கப்பட்டுள்ள வழக்குகள் சட்டப்படி செல்லாது என்று தொழிற்சங்கம் உயர் நீதிமன்றத்தில் வழக்கு தொடர ஏற்பாடுகள் செய்து வருகின்றது என்பதை அறிந்து பொதுமக்களை ஏமாற்றுவதற்காக வழக்குகள் வாபஸ் வாங்கப்படுகிறது என்று கூறிய பின்னர் 13 நாட்கள் ஆகியும் வழக்குகள் வாபஸ் வாங்கப்படவில்லையென்ருல் பாருங்களேன். (இதறகிடையில் சி. ஐ. டி. யூ. சங்கம கொடுத்த ரிவிஷன் மனு அடிப்படையில் வழக்குகளை உயர்நீதிமன்றம் ஸ்டே செய்துள்ளது.)

தி, மு. க. சங்கத்தில் தொழிலாளர்களைசேருமபடி நிர்ப்பந்தித்து அந்த சங்கம் மூலமாக வேலை கொடுக்கச் செய்யும் தி. மு. க. அமைச்சர்களின் தரக் குறைவான ஏற்பாடு ஒரு பக்கத்தில் தீவிரமாக நடைபெறுகிறது.

**அமைச்சர் வாக்குறுதி காற்றில் பறக்குது**

நவம்பர் 21-ம் தேதி சட்டமன்றத்தில்குமரி "மாவட்டப் போக்குவரதது் தொழிலாளர் பிரச்சனைகளை சுமுகமாகத் தீர்வுகாண ஏற்பாடு செய்யப்பட்டு வருகின்றன" என்று அமைச்சர் ராமச்சந்திரன் கொடுத்த வாக்குறுதியும் இன்று காற்றில் பறக்கிறது.

சொன்ன சொல்லை அமுல்படுத்தாமல் சாகச வேலை நடத்தும் தி. மு. க. அமைச்சர்களின் இந்தச் செயல் மிக மிகக் கேவலமானதாக உள்ளது.

இந்த மாதிரியான சாகச வேலைகளை எத்தனை நாளைக்குத்தான் திமுக அமைச்சர்கள் நடத்துவர்? தமிழகத் தொழிலாளி வர்க்கம் இதையெல்லாம் பார்த்துக் கொண்டு வாளாயிருக்கப் போவதில்லை.

---

மகாராஷ்டிர தேர்தல் முடிவைக் கேட்டு முக்காடு

## உ.பி.யில் காங்கிரஸ் பிரச்சார கூட்டங்கள் ரத்து;

### தலைவர்கள்பயணம் ஒத்திவைப்பு

லக்னோ ஜன. 16—

உத்திர பிரதேசத்தில் கடந்த வியாழனன்றுஆடம்பரமான முறையில் நடதத உத்தேசிக்கப்பட்டிருந்த தேர்தல் பிரச்சாரத் துவக்க விழா திடீரென்று ரத்து செய்யப்பட்டது.

இந்நிகழ்ச்சியையொட்டி உ.பி. நகரங்களில் ஊர்வலங்களும் பொதுக் கூட்டங்களும நடத்த உத்தேசிக்கப்பட்டிருந்தது.

இந்தக் கூட்டங்களில் பேசுவதற்கு காங்கிரஸ் தலைவர் சர்மாவும், ஐந்து மாநில முதலமைச்சர்களும், ஒன்பது மத்திய அமைச்சர்களும் வரவிருந்தார்கள்.

1971-ம் ஆண்டிலிருந்த நிலைமை 1974-ல் மாறியிருப்பதை உணராமல் காங்கிரஸ் கட்சி மகாராஷ்டி மாநில உபதேர்தல் முடிவுகளைத் தொடர்ந்து உ. பி. யில் தேர்தல்பிரச்சார இயக்கத்தைத் தொடங்க நாள் குறித்திருந்தார்கள்.

மகாராஷ்டிரத்தில் நடந்த உபதேர்தல்களில் ஒன்றில கூட காங்கிரஸ் வெற்றி பெருதது இங்குள்ள காங்கிரஸ் தலைவர்களுக்கு ஏமாற்றமாகப் போய் விட்டது.

மகாராஷ்டிரத்தில் தோற்ற கட்சி எந்த முகத்தோடு உ. பி. யில் ஊர்வலம் நடத்த முடியும் என்ற கேள்வி காங்கிரஸ்காரர்கள் மனதில் எழுந்தது.

இப்போதுஊர்வலம் நடததினல் பரிகாசத்துக்குள்ளாக நேரிடும் என்று கருதி உ.பி.யின் 12 நகரங்களில் நடைபெறவிருந்த தேர்தல் பிரசாரத் துவக்கவிழா ரத்து செய்யப்பட்டது.

காங்கிரஸ் தலைவர் சர்மாவும், தன்னுடைய உ. பி. பிரயாணத்தை ஒத்தி வைத்துவிட்டார்.

---

## திருப்பூர் பகுதியில் தேர்தல் வேலை தீவிரம்

திருப்பூர், ஜன. 16—

திருப்பூர் தொகுதி மத்திய தேர்தல் கமிட்டிக் கூட்டம் திருப்பூர் கமிட்டி செயலாளா கே. எஸ். கருப்பசாமி தலைமையில்நடைபெறறது.

சு. பால விநாயகம் தொகுதி நிலைமைபற்றியும், நிதிவசூலை தீவிரப்படுத்த வேண்டிய அவசியம்பற்றியும் விரிவுரை ஆற்றினர். பிறகு பின்கண்ட முடிவுகள் எடுக்கப்பட்டன.

1) தேர்தல் நிதிக்கு திருப்பூர் தொகுதியில் ரூ, 15000 வசூலிப்பது.

2) ஒரு சாவடிக்கு 10தட்டிகள் வீதம் 137 சாவடிக்கும் 1370 தட்டிகள் தயாரிப்பது

3) 26—1—74ல் பி. ஆர், நிலையத்தில் மதியம்

(4-ம் பக்கம் பார்க்க)

---

### கோவை தேர்தலில் கருணநிதி சாகசம்

# கடைசிநேரத்தில் தி.மு.க. ஓட்டு யாருக்கு விழும்?

## தோழர் ஏ. பாலசுப்ரமண்யம் விளக்கம்

மதுரை. ஜன: 17—

**கோவைத் தேர்தலில் மார்க்சிஸ்ட் கட்சி, வேட்பு மனுவை வாபஸ் வாங்கி விடலாம் என்று கருணநிதி கருத்து வெளியிட்டிருப்பதுபற்றி நமது சிறப்பு நிருபர் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் மாநிலச் செயலாளர் தோழர் ஏ. பாலசுப் ரமண்யத்திடம் விளக்கம் கேட்டார். அப்போது கேட்கப்பட்ட கேள்விகளையும் தோழர் பாலசுப்ரமண்யம் அளித்த பதில்களையும் கீழே பிரசுரிக்கிறோம்—**

கேள்வி:— மார்க்சிஸ்ட் கட்சி, கடைசி நேரத்தில் திண்டுக்கல் நாடாளுமன்ற தொகுதிக்கான வேட்பாளரை வாபஸ் வாங்கியது போல் கோவையிலும் நடக்கலாம் என்று தி. மு. க. தலைவர் கருணநிதி பேசியுள்ளாரே. அவரது கூற்றுக்கு ஆதாரம் உண்டா?

பதில்;— அவர் கூற்றுக்கு எந்தவித ஆதாரமும் இல்லை. திண்டுக்கல் தேர்தல் சமயத்தில் எம. ஜி. ஆர்- அவர்கள் நமது விருப்பத்திற்கிணங்க ஆளும் காங்கிரசையும், அது நடத்தும் மத்திய அரசையும் எதிரக்கும ஒரு அறிக்கையை வெளியிட்டார். அதில் ஓரளவு திருப்தி ஏற்பட்டதால் நமது வேட்பாளரை வாபஸ் பெற்ரேம. அந்த தேர்தல் இயக்கத்தையே சிண்டிகேட் எதிர்ப்பு, தி. மு. க. எதிர்ப்பு என்பதுடன் நிறகாமல், ஆளும் காங்கிரஸ் எதிர்ப்பு இயக்கமாகவும் நடத்தினேம. அன்று அமைந்த கூட்டு மேடைகளிலிருந்தும், நமது தனி மேடையிலிருந்தும் நாட்டின் இன்னல்கள் அனைத்துக்கும் மத்திய அரசு பின்பற்றும் அடிப்படைக் கொள்கைகளே பிரதான காரணம் என்று விளக்கினேம் — நண்பர் எம். ஜி. ஆரும், வலது கம்யூனிஸ்டுகளும் இதனை விரும்பாத போதிலும்.

கேள்வி:— பின் ஏன் திரு. கருணநிதி அவர்கள் இவ்வாறு கூறியுள்ளார்?

பதில்;— நமக்கு ஆத்திரம் ஏற்பட வேண்டும் என்பதற்காக அவ்வாறு கூறியுள்ளார். நாம் ஆத்திரததாலோ கோபத்தாலோ கோவையில் போட்டியிடவில்லை. கோவையில் போட்டியிட நமக்கு வலது கம்யூனிஸ்டுகளைக் காட்டிலும் அதிக உரிமை உண்டு என்பதால் போட்டியிடுகிறேம். பாண்டிச்சேரியில் நாடாளுமன்ற தொகுதியில் போட்டியிட நமக்கு அந்தஉரிமையில்லை என்பதால், கோவையில் போட்டியிடுகிறேம்

நண்பர் கருணநிதியின் நிலைதான் விநோதமானது. அதனை மறைக்கவே நம் மீது சாடுகிறர்,

### தி மு க வின் விநோதமான நிலை

கேள்வி:— அவரது "விநோதமான" நிலை என்பது என்ன?

பதில்:— அவரது கட்சி **கோவையில் நாடாளுமன்றத் தொகுதிக்கு போட்டிபோடுகிறதா? இல்லையா? என்று இதுவரை அறிவிக்கவில்லை. அது, இன்னும் பரிசீலனையில் இருக்கிறதாம்!** இந்நிலையில் உள்ளவர் தான், போட்டி போடுவோம் என்று உறுதியாக அறிவித்துள்ள நமது கட்சியைப் பற்றி கிண்டல் செய்ய முற்பட்டுள்ளார்!

கேள்வி:— ஏன் அவரது கட்சி இதுபற்றி மௌனம் சாதிக்கிறது?

பதில்:— அவரது கட்சி தமிழ் நாட்டில் ஆளும் கட்சி. தமிழ் மக்களின் பெரும்பாலோர் தனது கட்சியைத்தான ஆதரிக்கின்றனர் என்று இனறும் பேசி வரும் தி மு க வினர் கோவை நாடாளுமன்றத்துக்கான தேர்தலில் போட்டியிடவில்லை. என்ருலும், தர்மசங்கடம். போட்டியிட்டாலோ பயங்கரமான தோல்வியைச் சந்திக்கவேண்டும். அந்தக் கிலியினல் கலக்கமடைந்துள்ளார். என்ன செய்வது என்று தெரியாமல் தவிக்கிருர்; பாவம்.

### கருணநிதியின் வலை

கேள்வி:— சோசலிஸ்ட் கட்சியும், மணலி கந்தசாமி அவர்களது கடசியும் அந்தத் தொகுதியைக்கேட்பதாகவும், திமுக அந்த இரண்டு கட்சிகளில் ஏதாவது ஒன்றுடன் உடன்பாடு செய்துகொள்ளலாம் என்றும் பேசப்படுகிறதே?

பதில்;— அப்படிப்பட்ட ஹேஷ்யங்கள் அடிபடுகின்றன. **நமக்கும் வலை விரித்தார் நண்பர் கருணநிதி அவர்கள். நாம் சிக்கவில்லை.** நமது தலைவர்கள் பலரிடம் பேசிய "தூதர்" களிடம் நாம் கொள்கை நிலைகளில் நிற்பவர்கள் என்றும், தேர்தல் சந்தர்ப்பவாதிகள் அல்ல என்றும் தெளிவாக்கி விட்டோம். அதனல் அவருக்கு நம மீது கூடுதல் கோபம். அதனல் தான் இப்பொழுது நம்மைப்பற்றி கிண்டலாகப்பேசியுள்ளார்.

### கருணநிதி எதிர்பார்ப்பதென்ன?

கேள்வி; நம்மிடம் தூதனுப்பிய திரு. கருணநிதி என்ன எதிர்பார்த்தார் என்று கூறமுடியுமா?

பதில்: அவர் மனதில் என்ன எண்ணிக் கொண்டிருந்தார் என்று நாம்எப்படி திட்டவட்டமாககூற முடியும? ஒரு வேளை நாடாளுமன்ற தொகுதியை நமக்கு விட்டு, கோவை (மேற்கு) சட்டமன்ற தொகுதியை தி. மு. க. எடுத்துக் கொண்டு ஒருவருக்கொருவர் ஆதரவு தருவது என்ற ஒரு உடன்பாட்டைச் செய்து கொள்ள விரும்பியிருக்கக் கூடும். நாடாளுமன்றத் தொகுதியில் நமது கட்சியின் போட்டியை ஏற்பது என்ற அடிப்படையில் தானே உடன்பாடு சாத்தியம்? எனவே,

(4—ம் பக்கம் பார்க்க)

# தீக்கதிர்

## கண்துஞ்சாது நோயாளிகளை காப்போர் மீது வஞ்சம்

டில்லியில் அரசாங்க மருத்துவ மனைகளில் பணி புரியும் 1000 நர்சுகள் வேலைநீக்கம் செய்யப்பட்டுள்ளனர். மற்றும் ஆயிரத்துக்கு மேற்பட்ட நர்சுகளுக்கு ''ஏன் வேலையை விட்டு நீக்கக்கூடாது'' என்று கேட்டு நோட்டீஸ்கள் பிறப்பிக்கப்பட்டுள்ளன. மிகுந்த எண்ணிக்கையில் சஸ்பென்ஷன் உத்திரவுகளும் பிறப்பிக்கப்பட்டுள்ளன.

நோயாளிகளைக் கண்ணும் கருத்துமாகப் பார்த்து நலமுறச் செய்யும் அரிய பணியில் ஈடுபட்டிருப்பவர்கள் நர்சுகள். அவர்கள் மீது அரசாங்கத்துக்கு ஏன் இத்தகைய வஞ்சம்?

நர்சுகள் ஊதிய உயர்வு கோரிக்கையை முன் வைத்தது அரசாங்கத்தின் பார்வையில் மன்னிக்க முடியாத குற்றமாகப்பட்டுள்ளது.

இந்த ஆட்சியில் யார் ஊதிய உயர்வு கேட்டாலும் அது அரசாங்கத்துக்கு எதிரான நடவடிக்கையாகவே கருதப்படும்.

ஊதிய உயர்வு கேட்பதை அனுமதிக்க முடியாத நடவடிக்கையாக கருதும்போது நர்சுகள் வேலைநிறுத்தம் செய்தால் அதை இந்த அரசாங்கத்தால் பொறுத்துக் கொள்ள முடியுமா?

வேலை நிறுத்தம் செய்யும் எண்ணமுடையவர்களுக்கெல்லாம் எச்சரிக்கை விடுப்பதுபோல் நர்சுகள் வேலைநிறுத்தம் செய்த கணத்திலேயே வேலை நீக்க உத்திரவுகள் பிறந்துள்ளன.

வேலை நிறுத்தம் ஏற்பட்டதும் பேச்சுவார்த்தை நடத்தியும் தீர்வு காண முயற்சித்தும் இறுதி எச்சரிக்கை கொடுக்கும் வரை காத்துக் கொண்டிருக்க அரசு விரும்பவில்லை. இனிமேல் வேலை நிறுத்தம் செய்தால் உடனே வேலை நீக்கம் என்று பிரகடனப் படுத்துவது போல் நர்சுகளுக்கெதிராக அரசு பாணம் தொடுத்துள்ளது.

நர்சுகளுக்கு ஊதிய உயர்வு கொடுக்க வேண்டும் என்று அரசு நியமித்த ஊதியக் குழுவே சிபாரிசு செய்துள்ளது. ஊதியக் குழு அறிக்கை வெளியாகி பல மாதங்கள் உருண்டோடி விட்டன. எனினும் ஊதியக் குழு சிபாரிசுகளை ஏற்றுக்கொள்ளுவதாகவோ நிராகரிப்பதாகவோ அரசு இன்னும் அறிவிக்கவில்லை.

நர்சுகள் சங்கம் அரசாங்கத்துக்கு பலமுறை முறையீடுகள் செய்தும் திருப்திகரமான பதில் வரவில்லை.

ஊதியப்பற்றாக் குறையினாலும், வேலைப்பளுவினாலும் அவதியுறும் நர்சுகளுக்கு வேலை நிறுத்தம் செய்வதைத்தவிர வேறு வழியில்லை. வேலை நிறுத்தம் செய்வது சட்ட ரீதியான நடவடிக்கையேயாகும்.

உழைக்கும் மக்கள் பல ஆண்டுகளாக ரத்தம் சிந்தி போராடிப் பெற்றிருக்கும் உரிமை இது.

இந்த உரிமையைக்கூட விட்டு வைக்க காங்கிரஸ் அரசு விரும்பவில்லை.

வேலை நிறுத்தம் ஏற்பட்டால் பேச்சு நடத்தக்கூட அரசு முன்வர மறுக்கிறது. வேலை நிறுத்தம் வெடிக்கும் நிலைமையை வேண்டுமென்றே உண்டுபண்ணுகிறது. வேலை நிறுத்தம் வெடித்ததும் தீர்வு காண மறுத்து ஊழியர்களைத் தாக்க முற்படுகிறது. இந்த முறையில் ஊழியர்களை மிரட்டியும் உருட்டியும் ஊதிய முடக்கக் கொள்கையை அமுலாக்க விரும்புகிறது.

அரசாங்கத்தின் அடக்குமுறை கொள்கைகள் வலுத்து வருவதற்கேற்ப போராடும் மக்களின் ஒற்றுமை உணர்வும் வலுத்து வருகிறது.

அரசு மருத்துவமனை நர்சுகள் போராட்டம் மற்ற மருத்துவமனைகளுக்கும் பரவி வருகிறது. டில்லி நர்சுகள் போராட்டத்துக்கு ஆதரவாக மற்ற இடங்களிலும் போராட்டம் பரவுகிறது. இது அரசின் அடக்குமுறையை எதிர்த்து நிற்க போராடும் மக்களிடம் உருவாகிவரும் உறுதியையும் ஒற்றுமையையும் உணர்த்துகிறது.

---

## மகாராஷ்டிரத்தில் காங்கிரசுக்கு 4 தொகுதிகளிலும் பட்டை நாமம்!

பம்பாய், ஜன. 16—

மகாராஷ்டிர மாநிலத்தில் மத்திய பம்பாய் நாடாளுமன்றத் தொகுதிக்கும், ராம்டெக் நாடாளுமன்ற தொகுதிக்கும் ஸங்கோலா சவந்தவாடி ஆகிய இரு சட்டமன்றத் தொகுதிகளுக்கும் நடைபெற்ற உபதேர்தலில் இந்திரா காங்கிஸ் பெரும் தோல்வி கண்டது. இந்த 4 தொகுதிகளிலும் இந்திரா காங்கிரசுக்கு மக்கள் மரண அடி கொடுத்துவிட்டனர்.

மத்திய பம்பாய் நாடாளுமன்றத் தொகுதியில் - மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் ஆதரவு பெற்ற வலது கம்யூனிஸ்ட் கட்சியின் வேட்பாளர் ரோசாதேஷ் பாண்டே (டாங்கே மகள்) வெற்றி பெற்றார். முன்பு இத்தொகுதியில் காங்கிரஸ் வெற்றி பெற்றிருந்தது.

ஆனால், இந்த உபதேர்தலில் சிவசேனாவின் ஆதரவுடன் போட்டியிட்டுப்பார்த்தும்கூட காங்கிரஸ்கட்சிக்கு, மக்களிடமிருந்து மரண அடிதான் கிடைத்தது.

ராம்டெக்நாடாளுமன்றத் தொகுதியில மகாவிதர்ப ராஜ்ய சங்கர்ஷசமிதி வேட்பாளரும், ஸங்கோலா சட்டமன்றத் தொகுதியில குடியானவர் தொழிலாளர்கட்சி வேட்பாளரும், சவந்தவாடி சட்டமன்றத் தொதியில் சோசலிஸ்ட் கட்சி வேட்பாளரும் வெற்றி பெற்றனர்.

ஒவ்வொரு தொகுதியிலும் வேட்பாளர்கள் பெற்ற ஓட்டுக்களின் விவரம் வருமாறு:—

மத்திய பம்பாய் நாடாளுமன்றத் தொகுதியில்—

ரோஸா தேஷ் பாண்டே (வலது கம்யூ) 81653

ஆர். பண்டிட் (ஜனசங்கம) 74677

ராமாராவ் ஆதிக் (இ. காங்) 70185

ராம்டெக் நாடாளுமன்ற தொகுயில்—

ராமஹேடு (மகாவிதர்ப ராஜ்யசங்கர்ஷசமிதி) 219860

அனந்தராவ் கலம்கார் (இ. காங்) 82732

பர்தான் (வலது கம்யூ) 17341

சந்த்வாடி சட்டமன்றத் தொகுதியில்—

தயானந்மத்கர் (சோசலிஸ்டு கட்சி) 46,019

எஸ். ஆர். போஸலே (சுயேச்சை) 15,684

பிர்வீன் சந்திரபோஸலே (இ. காங்) 8140

கால்ஸேகார் (ஜனசங்கம) 2711

முன்பு இந்த தொகுதியில் வெற்றிபெற்ற இ.காங்கிரஸ் இந்த உபதேர்தலில் மூக்குடைபட்டது.

ஸ்கோலா சட்டமன்றத் தொகுதியில்—

ஜீ ஏ. தேஷ்முக் (தொழிலாளர் கட்சி) 39540

ஷபாகே (இ. காங்) 26631

முன்பு இத் தொகுதியில் வெற்றிபெற்றிருந்த இந்திரா காங்கிரஸ், இந்த உபதேர்தலில் மண்ணைக் கவ்வியது.

---

## மீரட் டிவிஷனல் எல்ஐசி அலுவலகம் கதவடைப்பு

### பூரியின் மிரட்டல்

புதுடெல்லி, ஜன. 16—

மீரட்டில்உள்ள எல்,ஐ.சி. டிவிசனல் அலுவலகமும் கதவடைப்பு செய்யப்பட்டது.

இந்தக் கதவடைப்பால்' இங்கு பணிபுரியும் 3-ம்பிரிவு, 4-ம் பிரிவு ஊழியர்கள் 450 பேர் பாதிக்கப்படுவர்.

### பூரியின் பயமுறுத்தல்

தற்போது கதவடைப்புச் செய்யாமல், செயல்பட்டு வரும் எல். ஐ. சி. கிளை நிறுவனங்களில் பணிபுரியும் 'ஊழியர்கள்கதவடைப்பைக் கண்டித்து காலவரையற்ற வேலைநிறுத்தம்போன்ற பல் வேறு கிளர்ச்சிகள் செய்து வருகிறார்கள்.

ஊழியர்களின் ஒற்றுமையையும் உறுதியையும் கண்டு கோரிக்கைகளை ஏற்கவோ, கதவடைப்பை நீக்கவோ எல். ஐ. சி. நிர்வாகமும் அரசும்முயற்சிக்கவில்லை.

மாறாக தற்போது செயல்பட்டுவரும் அலுவலகங்களிலும், வேலைநிறுத்தம்காரணமாக வேலை பாதிக்கப்படுமானால் அந்த அலுவலகங்களும் கதவடைப்புச் செய்யப்படும்', என்று எல்,ஐ,சி. சேர்மன் பூரி மிரட்டியுள்ளார்.

---

## வலது கம்யூனிஸ்ட் கட்சியின் தசாவதாரம்

மத்திய பம்பாய் நாடாளுமன்றதேர்தல் முடிவு வெளியாகியது. மார்க்சிஸ்ட் ஆதரவு பெற்ற வலதுகம்யூனிஸ்ட் வேட்பாளர் ரோசா தேஷ்பாண்டே, சிவசேனை ஆதரவுபெற்ற இந்திராகாங்கிரஸ் வேட்பாளர் ராமராவ் அடிக் என்பவரை தோற்கடித்து வெற்றி பெற்றுள்ளார்!

'இந்திராவின்கரங்களைவலுப்படுத்த ஓட்டுக்கொடுங்கள், என்று சொல்லி 1971-ம் ஆண்டு தேர்தலில் பம்பாயில் ஓட்டுக்கேட்ட டாங்கே இந்த முறை 'பிற்போக்கு இந்திரா காங்கிரஸ் சிவசேனை கூட்டணியை தோற்கடிக்க ரோசாதேஷ் பாண்டேக்கு வாக்களியுங்கள் என்று பிரச்சாரம் செய்தார்.

சிவசேனை-இந்திரா காங்கிரஸ் கூட்டணியின் முக்கிய சிற்பி இந்திரா காங்கிரஸ் மாநிலத்தலைவர் ரஜனி படேல்ஆகும்.

காங்கிரஸ்காரர்களை முற்போக்கு பிற்போக்கு என்று கூறுபோடும்போது இந்த ரஜனிபடேல், வலது கம்யூனிஸ்டுகளால் முற்போக்குப் பட்டியலில் உள் படுத்தப்பட்டவராகும்,

காங்கிரஸ்- சிவசேனை கூட்டணிக்கெதிராக இங்கு உருவான மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி வலது கம்யூனிஸ்ட் கட்சி—சோஷலிஸ்ட்கட்சி அணி ஒரு ஒப்புயர்வற்ற இடதுசாரி அணியாகும். இதைப்பற்றி வலது கம்யூனிஸ்ட் தலைவர் எஸ். ஏ. டாங்கே கூறுவதைப் பாருங்கள் "திருமதி ரோசாதேஸ்பாண்டேயும், திருமதி அகலியா ரங்கனேக்கரும், திருமதி மிருனாளினிகோரேயும் ஒன்றாக ஒரே மேடையில் அணிதிரண்டால் யாராலும் தடுக்க முடியாத ஒரு சக்தியாக மாறும் அந்தக் கூட்டணி."

அதாவது வலது கம்யூனிஸ்ட்- மார்க்சிஸ்ட் —சோசலிஸ்ட் கூட்டணியைத்தான் அவர் அவ்வாறு வர்ணித்தார்.

### வலது கம்யூனிஸ்டுகள் தயாரா?

ஆனால் இவையெல்லாம் பம்பாயில் மட்டும் தான், மத்திய பம்பாயில் எஸ். ஏ. டாங்கே இவ்வாறு வர்ணனை செய்த கூட்டணி—ஒற்றுமை அகில இந்திய அளவில் எல்லாபிரதேசங்களுக்கும் பரவிட செய்ய வலதுகம்யூனிஸ்டுகள் தயாரா? கம்யூனிஸ்ட் மார்க்சிஸ்ட்கட்சியோடும், சோசலிஸ்ட்கட்சியோடும் சேர்ந்து காங்கிரசுக்கும் ஏனைய பிற்போக்கு சக்திகளுக்குமெதிராக ஒரு போராட்ட அணி கட்டி எழுப்ப வலது கம்யூனிஸ்ட்டுகள் தயார் தானா? அதற்கு அவர்கள் தயாரானால் இந்திய அரசியலின் இன்றைய நிலையையே மாற்றிட முடியுமே.

ஆனால் எஸ். ஏ. டாங்கே பம்பாயில் நடத்திய தீப்பொறிபறக்கும் பிரசங்கங்கள் வெறும் நாடகம் அல்லது பேரம் பேசல் தந்திரம் மட்டுமே தான் என்று நாட்டுமக்கள் நம்பினால் ஆச்சரியப்பட வேண்டியதில்லை. ஏனெனில் தமிழ் நாட்டிலும், உத்திரப்பிரதேசிலும், ஒரிசாவிலும் வலதுகள் கையாண்டிருக்கும் தேர்தல் கூட்டணி நடவடிக்கைகள் அப்படியல்லவா இருக்கிறது.

உத்திரப்பிரதேசிலும். ஒரிசாவிலும் காங்கிரசுக்கு வெற்றிபெற வேண்டுமென்றால் பம்பாயில் சிவசேனை தேவைப்பட்டது போல,தமிழகத்தில் சிண்டி தேவைப்படுவதுபோல வலது கம்யூனிஸ்டுகளின் உதவிதேவை. பம்பாயில் கருவேப்பிலை போன்று வீசியெறிந்த வலதுகளை உத்திரப்பிரதேசிலும், ஒரிசாவிலும் காங்கிரஸ் தங்களது வாலில் கட்டிப்போட்டிருக்கிறது. உத்திரப்பிரதேச சர்க்கரை ஆலை அதிபர்களின் அரவணைப்பில் 'சுகம்' காணும் காங்கிரசின் அரவணைப்பில்' வலது கம்யூனிஸ்ட் கட்சி சுகம்' காண்கிறது!

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியும், சோசலிஸ்ட் கட்சியும்குடியரசுக் கட்சியும், புரட்சி சோசலிஸ்ட் கட்சியும் சேர்ந்து உருவாக்கிய இடதுசாரி முன்னணியில்சேர உத்திரப்பிரதேச வலது கம்யூனிஸ்டகள் தயாராக இல்லை. அதற்குப் பதிலாக காங்கிரசுக்கு வெற்றிவாய்ப்பு அளிக்கும் நடைமுறைக் கொள்கையை அங்கு கையாள்கிறது வலதுகம்யூனிஸ்ட் கட்சி.

உத்திரப்பிரதேசிலும் ஒரிசாவிலும் காங்கிரசை வெற்றிபெறச்செய்ய (ஏன் பாண்டிச்சேரியிலும்கூட...) அப்படி காங்கிரஸ் அரசுக்ள் உருவாக வழிவகைசெய்யும் வலது கம்யூனிஸ்டுகளுக்கு எப்படி கேடுகெட்ட மத்திய காங்கிரஸ் ஆட்சியை எதிர்த்துப் போராடமுடியும்? காங்கிரஸ் அரசின் தவறான கொள்கைகளுக்கெதிராக வலது கம்யூனிஸ்டுகள் (தற்பொழுது கல்யாணசுந்தரமும் சேர்ந்து) அடிக்கும் வாய்ச்சவடால் மக்களை ஏமாற்றும் வாய்ச்சவடால்தான் என்பதில் ஐயமென்ன?

தலைவர், பம்பாய் நகரின் நடுத் தெருவில் நின்று மார்க்சிஸ்ட் சோசலிஸ்ட் வலது கம்யூனிஸ்ட் கூட்டணியின் வல்லமையை வர்ணிக்கும் அதேவேளையில் தொண்டர்கள் ஒரிசாவிலும், உத்தரப்பிரதேசிலும் காங்கிரசோடு சேர்த்துக் கொண்டு சீட்டுகள் கேட்டு மன்றாடுகின்றனர். ஒரு கட்சி இதைவிட தரம தாழ இன்னும் என்ன வேண்டும்?

தமிழ்நாட்டிலும் பாண்டிச்சேரியிலும் ஏற்பட்ட இண்டி -சிண்டி கூட்டணியையாவது புரிந்து கொள்ள வலதுகளால் முடியவில்லை. 'மிக மோசமான பிற்போக்காளர்கள்' என்று தாங்கள் வர்ணித்த சிண்டிகேட்டாருடன் இங்கு இண்டிகேட் உறவு கொண்டதைப் பார்த்து வலதுகளால் அழத்தான் முடிகிறது. இதைப் பற்றி வலது கம்யூனிஸ்ட் கட்சியின் தேசியக் கவுன்சில் சொலவதைப் பாருங்கள்.

''இந்தக் கூட்டணி ஆளும் காங்கிரசுக்குள் உள்ள வலதுசாரிகளையும்,வலதுசாரி பிற்போக்காளர்களையும் தான் வலுவடையச் செய்யும். 1969 பிளவுக்குப் பின்னர்இந்திரா காங்கிரஸ் கொடுத்த வாக்குறுதிகளை மீறுவதுதான் இக்கூட்டணி.'' பாவம் வலது கம்யூனிஸ்டுகள்; வேளைக்கொரு கொள்கை வகுப்பதால எப்போது எதைச் சொல்ல வேண்டும் என்பதுகூட தெரியாது திண்டாடுகின்றனர்.

கோவை நாடாளுமன்ற தொகுதியில் உருவாகவிருந்த மார்க்கிஸ்ட் — வலது — அ. தி. மு. க கூட்டணி: அதாவது திண்டுக்கல்லில் உருவான கூட்டணி. இந்திரா காங்கிரசின் சிம்ம சொப்பனமான கூட்டணி. அந்த கூட்டணியை நொறுக்கத்தானே வலது கம்யூனிஸ்டுகள் பாண்டிச்சேரி நாடாளுமன்ற தொகுதியில் போட்டியிடாது ''கோவை நாடாளுமன்ற தொகுதியில்தான் போட்டியிடுவோம்'' என்று முடிவை மேற்கொண்டது. அதாவது இந்த முடிவு வாயிலாக இந்திரா காங்கிரசின் விருப்பத்தை மறைமுகமாக பாண்டிச்சேரியிலும், கோவையிலும் பூர்த்தி செய்கிருக்கின்றனர் வலது கம்யூனிஸ்ட்டுகள்.

இந்த மாதிரியான முடிவுகள் மேற்கொண்டதன் காரணமாக வலது கம்யூனிஸ்டுகளுக்குத்தான் எத்தனை விதமான வேஷங்கள கட்ட வேண்டிய நிலை ஏற்பட்டிருக்கிறது.

பம்பாயில், ''இந்திரா காங்கிரஸ்— சிவசேனை பிற்போக்குக் கூட்டணியை தோற்கடியுங்கள'' என்று பிரச்சாரம்.

பிற்போக்கு சிண்டி—இண்டி கூட்டணிக்கெதிராக கோவையில் பிரசங்கம்

திருமதிக் கல்யாணி குமாரமங்கலம் இந்திரா காங்கிரஸ் சார்பில பாண்டிச்சேரி நாடாளுமன்றதொகுதியில் போட்டியிட்டால் கோவைப் பிரசங்கம், பாண்டிச்சேரியில நடதத முடியாத இக்கட்டான நிலை.

அதே இந்திரா காங்கிரசுடன் அதாவது சிவசேனையுடனும், சிண்டிகேட் காங்கிரசுடனும் கூட்டு சேரும் அதே இந்திரா காங்கிரசுடன உத்தரப் பிரதேசிலும், ஒரிசாவிலும் கூட்டு சேர்ந்து 'முற்போக்கு இந்திரா காங்கிரஸ்—வலது சக்தி'க்கு வோட்டளியுங்கள்' என்ற பிரச்சாரம்.

அதே இந்திரா காங்கிரசுடன், சிவசேனையுடனும், சிண்டியுடனும் கூட்டு சேரும் இந்திரா காங்கிரசுடன கூட்டு சேர்ந்து கேரள ஆடசிக் கட்டிலில்......

மேற்குவங்க முற்போக்கு முன்னணியில்.........

ஆம்! பொது மக்களே, இதுதான் வலது கம்யூனிஸ்ட் கட்சி என்பது.

### திரிபுவாதிகள்

இந்திய ஆட்சி பீடத்தையும், ஆளும் வர்க்கத்தையும் அவர்களை பிரதிநிதித்துவ படுத்தும் ஆளும் கட்சியையும், ஏனைய பூர்ஷுவா கட்சிகளையும பற்றி விஞ்ஞான ரீதியில் மதிப்பிட்டு தொழிலாளி—விவசாயி மக்கள் பகுதியை புரட்சிகரமான முன்னேற்ற பாதையில் கொண்டு செல்ல வேண்டிய தந்திரங்களையும் செயல் முறைகளையும் கையாளும் ஒரு கம்யூனிஸ்ட் கட்சிக்கு மேற்சொன்ன முறையில் பல்வேறு வேஷங்கள் போட முடியுமா?

முடியாது. எனவே தான் வலது கம்யூனிஸ்டுகளை கம்யூனிஸ்டுகள் அல்ல. திரிபுவாதிகள் என்று நாம் சொல்கிறோம்.

''தங்களுடன் தேர்தல்களிலும் மற்ற பதவிகளுக்குமாக கூட்டு சேரத தயார்'' என்பதை வைத்து ஆளும் காங்கிரஸ கட்சியின் ஒவ்வொரு தலைவர்களுக்கும், பிரதேசத் தலைமைக்கும் 'முற்போக்கு'. 'பிற்போக்கு' முத்திரை குத்துவது, ஆளும் காங்கிரஸ் கட்சிக்குள் நடக்கும் கோஷ்டி மோதலையும், பூசலையும் வர்க்கப் போராட்டத்திலிருந்து உருவான முரண்பாடுகள் என்று கற்பனை செய்து ஏதாவது ஒரு பிரிவின் வாலில்தொங்குவது; உண்மையான இடதுசாரி ஒற்றுமைக்கு பாடுபடும் கட்சிகளுக்கெதிராக பொய்ப பிரச்சாரத்தைக் கட்டவிழ்த்து விடுவது; ஆளும் காங்கிரஸ் இடதுபக்கம் செல்கிறது என்று சொல்லி இடதுசாரி அணியைபிளவுபடுத்திஆளும வர்க்கங்களுக்கு கீழ்ப்படுத்த வழிவகுப்பது, இவையெல்லாம்தான் இன்று வலது கம்யூனிஸ்ட் கட்சி நடத்தும் கேடுகெட்ட அரசியல் வேலைகள்.

இதன் மேன்மையை தெளிவாகப் புரிந்து கொண்டது இந்திராதான். அதாவது காங்கிரசும், வலது கம்யூனிஸ்டுமாக உள்ள ஒற்றுமையையும், உறவையும் பற்றியும் இதனால் எற்படும் பிரயோஜனத்தைப் பற்றியும், சிலர் விமர்சித்த போது, உத்தரபிரதேச எம். பிக்கள் கூட்டத்தில் அதற்கு பதில் கொடுத்து இந்திராகாந்தி பேசியதைப் பாருங்கள்.

'காங்கிரஸ் — வலது கம்யூனிஸ்ட் கூட்டணியினால் பிரயோஜனம் ஏற்படவில்லை என்று சொல்வது சரியல்ல. இந்த கூட்டணி ஏற்பட்டதால் மட்டும் தானே கேரளத்திலும், மேற்கு வங்கத்திலும் கம்யூனிசத்தை தடுத்து நிறுத்த நம்மால் முடிந்தது.''

ஆம். கம்யூனிச வளர்ச்சியை தடை செய்யும் ஆயுதமாக ஆளும் பிற்போக்கு வர்க்கங்களுக்கு வலது கம்யூனிஸ்டுகள் பயன் படுகின்றனர்.

---

## கோரிக்கைகளை ஏற்காவிட்டால் உண்ணாவிரதப் போராட்டம்

### எஞ்சின் தொழிலாளர் சங்கத்தின் எச்சரிக்கை

சென்னை, ஜன. 16—

ரயில் எஞ்சின் தொழிலாளர்களின் கோரிக்கைகளை தென் மண்டல ரயில்வே நிர்வாகத்தாரால் ஏற்றுக் கொள்ளப்படாவிட்டால் தென்மண்டல ரயில்வே தொழிலாளர்கள் பிப்ரவரி மாதத்திலிருந்து உண்ணாவிரதப் போராட்டத்தை தொடங்கப் போவதாக ரயில எஞ்சின் தொழிலாளர்களின் தென் மண்டல வொர்கிங் கமிட்டி எச்சரித்துள்ளது-

மேலும் இக்கமிட்டி அ.இ, ரயில்வே எஞ்சின் தொழிலாளர் சங்க நிர்வாகக் கமிட்டியின் தீர்மானத்தை ஆதரித்தும் தீர்மானம் ஒன்றை நிறைவேற்றியது.

### எதிர்ப்பு நடவடிக்கை

அனுவசியமாக எஞ்சின் தொழிலாளர்கள்ரெயில்வே நிர்வாகத்தால் கைது செய் செய்யப்படுவதை கமிட்டி கண்டனம் செய்தது. இனி மேலும் கைது நடைபெறுமானால், அதை எதிர்த்து உடனடியாக ஆங்காங்கே எஞ்சின் தொழிலாளர்கள் தங்களுக்கு சரிஎனபடுகின்ற முறையில எதிர்ப்பு நடவடிக்கை எடுக்க வேண்டும் என்று எஞ்சின் தொழிலாளர்களுக்கு கமிட்டி வழிகாட்டியுள்ளது.

### டிசம்பர் ஒப்பந்தமென்ன?

இம்மாதிரியாக எஞ்சின் தொழிலாளர்களைக் கைது செயவது எனபது ரயில்வே அமைச்சர் கொடுத்த வாககுறுதிக்கு முரணானது என அ.இ எஞ்சின் தொழிலாளர் சங்கத்தலைவர் ரதனசபாபதி கூறினார்.

மேலும், டிசம்பர் மாத ஒப்பந்தப்படி, கைது செய்யப்பட்டவர்கள் உடனடியாக விடுதலை செய்யப்பட வேண்டும என்றும் அவ்வாறு விடுதலை செய்யப்பட்டபின் அத்தொழிலாளர்கள வேலைக்குத் திரும்பா விட்டால் தான் அவர்கள் மீது குற்றப்பத்திரிக்கை கொடுக்க வேண்டும் என்றும் அவர் கூறினார்.

---

## சீனி ஊழல்

லக்னோ, ஜன. 16—

பணம் சம்பாதிப்பது எவ்வளவு கடினகாரியம் என்பதை எல்லாராலும் புரிந்து கொள்ள முடியும் ஆனால் காங்கிரஸ் கட்சிக்கு அப்படியல்ல டிசம்பர் மாதம 1-ந் தேதி ஒரு அறிவிப்பு வந்தது. சீனி விலை நிர்ணயம பற்றிய அறிவிப்பு அது.

அவ்வளவுதான் காங்கிரஸ் கட்சியின் தேர்தல் நிதி 20 கோடி ரூபாயககு கிட்டததட்ட உயர்ந்திருக்கும் என்று எதிர்பார்க்கப் படுகிறது.

அப்படிஎன்ன அறிவித்து விட்டார்கள்?

சீனி குவிண்டாலுக்கு ரூ. 150. 91 காசு என்று இருந்தது, இப்போது 158. 60 காசு உயர்த்தப் பட்டிருக்கிறது.

இதில் சீனி ஆலை முதலாளிகளுக்கு டன்னுக்கு ரூ 77 அதிகமாக கிடைக்கும். இது லெவி சீனிக்காக மட்டும். மற்றபடி, விற்பது பற்றி கேட்கவே வேண்டாம.

காங்கிரஸ் கட்சிக்கு 20 கோடி ரூபாய் கொடுத்த பின்பும், இந்த சர்க்கரை ஆலை முதலாளிகளுக்கு என்ன கிடைக்கும்?

காங்கிரஸ் எம். பி. சத்பங்கபூர் கூற்றுப்படி,ஆண்டுககு 200 கோடி ரூபாய் கிடைககும்.

உற்பத்தியைப் பெருக்க வேண்டும் என்று இந்திரா அம்மையார் ஒப்பாரி வைக்கிறார்.

1972—73ம் ஆண்டு 25 சதம் சீனி உற்பத்தி கூடியிருக்கிறது. 1973—74ல இன்னும் 15 சதம் கூடவிருக்கிறது. சீனியில் விலை இறங்கவில்லை. மாறாக ஏறியிருக்கிறது.

### ஆலை முதலாளிகளுக்கு உதவி

இதுமட்டுமல்ல. நியாயமான விலையான ரூ2. 15க்கு

(5-ம் பத்தி பார்க்க)

(2-ம் பத்தி தொடர்ச்சி)

சீனி போடுவதை அவ்வப்போது தள்ளிப்போடுவது அரசாங்கத்திடமுள்ள லெவி சீனியை வெளியே விடாமல்நிறுத்துவது ஆகிய வேலைகளை அரசாங்கம் செய்து, அதன் காரணமாக, மக்கள், சீனியை வெளியில் வாங்க நிர்ப்பந்தம் ஏற்படுதது, ஆலை முதலாளிகளுக்கு, உதவி செய்கிறது. இதன் காரணமாக 'சுதந்திரச் சந்தை'' யில் சீனிக்கிராக்கி ஏற்பட்டு, விலை கூடுகிறது.

உத்திரப்பிரதேசத்தில், புதிய காங்கிரஸ் அரசை ஏற்படுத்தியதற்கான முக்கிய காரணங்களில் இதுவும் ஒன்று.

உத்திரப்பிரதேசத்தில், செல்வாக்குள்ளபகுதியினர் சர்க்கரை ஆலை முதலாளிகள் ஆவர். ஆகையால அவர்களைச் சரிக்கட்டுவது காங்கிரஸ் கட்சிக்கும் அதன் அரசுக்கும் அவசியமாகிறது. அவர்களுடைய ஒத்துழைப்பும், பணமும், மற்றவைகளும் தேர்தல் காலத்தில் வேண்டும்.

இவையெல்லாம், ஆளும் வர்க்கம், சுதந்திரமான தேர்தலைக் கண்டு அஞ்சுவதையே காட்டுகிறது. சாதாரண மக்களை தேர்தல் மூலம் காங்கிரஸ் கட்சி சந்திப்பதற்கு அஞ்சுவதையே காட்டுகிறது.

எப்படியாவது எந்தவகையிலாவது, மக்களின் தீர்ப்பை, தேர்தல் முடிவை மாற்றியமைக்க வேண்டும் என்பதுதான் காங்கிரஸ் கட்சியின் இப்போதைய நோக்கம.

---




## உரம் கிடைக்குமா?

ஐயா,

பழனித் தாலுகா தொட்டம்பட்டி ஊராட்சி ஒன்றியத்தில் உள்ள விவசாயிகளுக்கு உரம் சரியாக சப்ளை செய்யப்படுவதில்லை

இப்பகுதி விவசாயிகளுக்கு கிராம நல அதிகாரி மூலம் உரக் கார்டுகள் சப்ளையாகின்றன. அதற்காக கார்டு ஒன்றுக்கு ரூ 3 வாங்கப்படுகிறதாம். ஆனால் அதற்காக ரசீது ஏதும தரப்படுவது இல்லையாம்.

இவர் மூலம் எல்லாக் கார்டுகளும் சப்ளையாகியுள்ளபோதிலும் இதுவரை அக்கார்டுகளுக்கு போதிய உரம் கிடைக்கவில்லை.

பணம் கொடுத்து வாங்கப்பட்ட கார்டுகளுக்கு மட்டும், கார்டுக்கு5கிலோ வீதம தான் ஏஜண்டு உரம் கொடுக்கின்றனராம். மீதி உரம் வெளி மார்க்கட்டில் விறகப்பட்டுவருகிறதாம்.

இவ்வாறு உரத்தைவெளி மார்க்கெட்டில் விற்பனை செய்து விட்டு விவசாயிகளுக்கு கிலோ கணக்கில் கொடுத்தால் எப்படி விவசாயம் நடக்கும். உற்பத்தி பெருகும்.

பசுமைப் புரட்சி பற்றி நாள் தோறும் தம்பட்டம அடிக்கும் ஆட்சியாளர்களும் அதிகாரிகளும் தலையிட்டு இவ்வட்டார விவசாயிகளுக்கு உரம் தாராளமாக போதிய அளவு நிர்ணய விலையில் கிடைக்க உரிய நடவடிக்கை எடுப்பார்களா?

இப்படிக்கு,
நா. கந்தசாமி
கம்யூனிஸ்ட் கட்சி
(மார்க்சிஸ்ட்)
நாச்சியப்பன்கவுண்டன் - வலசு
பொருளூர்(போஸ்ட்)

## வேலை பாதுகாப்புகோரி
# இடிக்கி திட்ட தொழிலாளர்கள் போராட ஆயத்தம்

கோட்டயம், ஜன. 17— ஜனவரி மாதக்கடைசியிலிருந்து கேரளத்தின் இடிக்கியில் கட்டப்படும் ஹைட்ரோ - எலக்ட்ரிக் கட்மானத்தில் வேலைசெய்யும் 6 ஆயிரம் தொழிலாளர்கள் வேலைநிறுத்தம் செய்ய முடிவு செய்துள்ளனர்.

கட்டுமானத்திட்டம் முடிவடைவதற்குள் வேலைப் பாதுகாப்பும், வேலை உத்தரவாதமும் அளிக்கப்பட வேண்டும் என்று கோரியே இவ்வேலை நிறுத்தம் நடைபெற விருக்கிறது.

சி ஐ டி யூ கம்யூனிஸ்ட் யூனிடி செனடர், புரட்சி சோசலிஸ்ட் கட்சியின் கீழ் உள்ள தொழிற்சங்கம், ஏ ஐ டி யூ சி, ஐ என் டி யூ சி போட்டு எடடுச் சங்கங்களின் கூட்டுத் தலைமையில் இவ்வேலை நிறுத்தம் நடைபெற விருக்கிறது.

இவ்வெட்டுச் சங்கங்களின் பிரதிநிதிகள் அடங்கிய ஒரு கூட்டுக் கவுன்சிலும் அமைக்கப்பட்டுள்ளது. ஐ என் டி சி யின் தலைவர் கோவிந்த குட்டி கூட்டு நடவடிக்கை கவுன்சிலின் கன்வீனராவார்.

### உறுதிமொழி காற்றில்

இப்போராட்டம் சம்பந்தமாக கூட்டு நடவடிக்கை கவுன்சில் உறுப்பினர்கள் நிருபர்களிடம் விளக்கினர்.

கனடாவின் உதவியோடு கட்டப்படும் இந்த ஹைடிரே — எலக்டிரிக் திட்டத்தில் வேலை செய்யும் தொழிலாளர்களை நிரந்தரமாக்கி விடுவதாக மத்திய மாநில அரசுகளால் உறுதிமொழி கொடுக்கப்பட்டிருந்தது. ஆனால் இதுவரை எவ்வித நடவடிக்கையும் எடுக்கவில்லை என்று கூறினர்.

### வேலை நிறுத்தம் மறியல்

மேலும், தங்களை நிரந்தரமாக்கக் கோரி தொழிலாளர்கள் ஜனவரி 31-லிருந்து வேலைநிறுத்தம் செய்வர் என்றும் மாநில சர்க்கார் மின்சார வாரியம் இவைகளின் போக்குகளை கண்டித்து கேரள அசெம்பிளியின் முன்பு அதேநாளன்று சத்தியாக்கிரகம் நடத்துவர் என்றும் நிருபர்களிடம் அவர்கள் தெரிவித்தனர்.

### வேலை நிறுத்தம் தவிர்க்க முடியாதது

கடந்த வருடம் அரசாங்கத்தால் ஸ்பெஷல் ஆபீசர் ஒருவர் நியமிக்கப்பட்டார். அவர் இடிக்கித்திட்டதொழிலாளர்களின் சீனியாரிடி லிஸ்ட் ஒன்று தயாரித்தார், அதன் நோக்கமே, இடிக்கித்திட்ட கட்டுமான வேலைக்குப்பிறகு அவர்களை மின்சார வாரியத்திலும், அரசாங்கத் தொழில்துறைகளும்சேர்ப்பதற்கே. ஆனல் தறபோது மினசார வரியத்திற்கு 2 ஆயிரம் பேர் வேலைக்குத் தேவைப்படுகின்றனா. ஆனல் அரசாங்கம் கொடுத்த வாக்குறுதிப்படி செயல்பட மறுக்கிறது. இடிக்கித்திட்ட தொழிலாளர்களை அக்காலியிடங்களில் சேர்ப்பதற்கு அரசாங்கமோ, மின்சார வாரியமோ, எவ்வித நடவடிக்கையும் எடுக்கப்படவில்லை.

அதுமட்டுமல்ல, இடிக்கித்திட்டத்தில் வேலை செய்யும் தொழிலாளர்களில் 700 பேரை வேலை நீக்கம் செய்யவும் அரசாங்கம் முயற்சிக்கிறது. எனவே, இடுக்கி கட்டுமானத்திட்டம் முடிவடைவதற்கு முன்பே வேலைநிறுத்தம் செய்வது தவிர்க்கமுடியாதது என்று கூட்டு நடவடிக்கை கவுன்சில் உறுப்பினர்கள் அறிவித்தனர்.

இடிக்கித்திட்ட கட்டுமான வேலை முடிந்த பிறகு தொழிலாளர்களுக்கு வேலை உத்திரவாதம் வேலை பாதுகாப்புக்கான உறுதிமொழி கொடுக்கப்படாமல் இடிக்கி திட்ட கட்டுமான வேலையை முடிப்பதற்கு அதிகாரிகளோடு தொழிலாளர்கள் ஒத்துழைப்பது என்ற பிரச்சினையே எழமுடியாது என்றும் அவர்கள் கூறினர்.

## மதுரைநகர்மோட்டாரககைத்தறி நெசவாளர் போராட்டம் வெற்றி

மதுரை, ஜன. 17— மதுரை நகர் மோட்டாரக கைத்தறி நெசவாளர்கள் கூலி உயர்வு கோரி நடத்திய போராட்டம் வெற்றி பெற்றுள்ளது. இப்போராட்டத்தில் சிறை சென்ற சி. ஐ, டி. யூ தமிழ் மாநிலக்கமிட்டி உறுப்பினர் பாலகிருஷ்ணன் உள்பட 173 தொழிலாளர்களும் விடுதலை செய்யப் பட்டனர்.

ஜனவரி 14ம்தேதி மதுரை மாநகர் கைத்தறி, ஜவுளி உற்பத்தியாளர்களுக்கும், மோட்டாரக நெசவாளர் சங்கத்தக்கும் இடையே மதுரைநகர் டெபுடி போலீஸ் சூப்ரண்டன்ட் முன்னிலையில் கீழ்கண்ட உடன்பாடு ஏற்பட்டுள்ளது.

1 டர்க்கி கிளாத் திங் முதலிய ரகங்களுக்கு 6 சத கூலி உயர்வு.

2 கேன்வாசர் ரகங்களுக்கு 7 சத கூலி உயர்வு.

3 புளி: அழிக்கன் போன்ற துண்டு ரகங்களுக்கு 14 சத கூலிஉயர்வு

4 வேஷ்டி ரகங்களுக்கு 15 சத கூலி உயர்வு

5 பாவு போடுதல், அச்சுப்பிடித்தல் ரோல் சுற்றுதல் ஆகியவற்றிற்கு 4 சத கூலிஉயர்வு

5 டப்பா சுற்றுதல்—20 சுற்றும் கழி ஒன்றுக்கு 4 பைசா கூலி உயர்வு

6 தார் சுற்றுதல் 20 சுற்றும் கழி ஒன்றுக்கு 4 பைசா கூலிஉயர்வு

7 ஆடோமேடிக் ரகங்களுக்கு உயர்த்திக் கொடுக்கப்பட்ட 8 சத கூலி உயர்வை இதுவரை கொடுக்காமலிருப்பவர்கள் மேற்படி கூலி உயர்வை உடனடியாக அமுல்படுத்த வேண்டும்.

இந்த ஒப்பந்தம் ஏற்பட்டதை யொட்டி, கூலி உயர்வுப் போராட்டத்தில் சிறை சென்ற தோழர்கள் பாலகிருஷ்ணன. ஜே, எஸ். கிருஷ்ணமூர்த்தி ஆகியோரும், மற்றும் பெண்கள் குழந்தைகள் 23பேரும்உள்பட 173 தொழிலாளர்களும் விடுதலை செய்யப்பட்டனர்.

கூலி உயர்வு கோரி அவனியாபுரம பிரதேசத்தில் நடக்கும் நெசவாளர் போராட்டம் நீடிக்கிறது.

## பீகாரில்
## பதுக்கல், கள்ளமார்க்கட் காரர்களைப் பாதுகாக்க
# உணவு அமைச்சர் பலிகடா

பாட்னா, ஜன.17— பீகார் மாநில உணவு, சப்ளை, வர்த்தக அமைச்சருக்கு அவரது பதவியிலிருந்து கல்தா கொடுக்கப்பட்டுள்ளது. பீகார் முதலமைச்சர் அப்துல்கபூரே அவ்விலாக்காக்களை எடுத்துக் கொண்டார்.

### மக்களை திசை திருப்புதல்

பீகாரில் அத்தியாவசிய பொருட்களின் விலை உயர்வும், உணவுத் தட்டுப்பாடுகளின் பற்றுக்குறையும் கடுமையாக உள்ளதால், பொதுமக்களிடம் அரசாங்கத்தின் மீது கடும் அதிருப்தி ஏற்பட்டுள்ளது. இந்த அதிருப்தியை திசை திருப்பிவிடவே உணவு அமைச்சரின் பதவி பறிக்கப்பட்டுள்ளது.

### பலிகடா

பதுக்கல்காரர்களையும், கள்ள மார்க்கெட்காரர்களையும், வர்த்தகச் சூதாடிகளையும் அடக்கி ஒடுக்குவதற்கான கொள்கை காங்கிரஸ் ஆட்சியினரிடம் இல்லை அமைச்சரவையின் கூட்டுப் பொறுப்பை மறைத்துவிட்டு அவ்வப்போது ஒரு அமைச்சரை பலி கடா ஆக்குவதன் மூலம் (இந்திரா காந்தி, மொரார்ஜி தேசாயை அவரது பதவியிலிருந்து வெளியே பிடித்துதள்ளியது போல்) நெருக்கடிக்கான உண்மைக் காரணங்களை மறைக்கப்பார்க்கின்றனர். இந்த அடிப்படையில்தான் பீகார் உணவு அமைச்சர் சாஹியின் பதவி பறிக்கப்பட்டுள்ளது. பதுக்கல் காரர்கள்.கள்ள மார்க்கெட் காரர்கள், வர்த்தகச்சூதாடிகளுக்காக பாவம் சாஹி பலி கடாவானர்.

### பதவிச்சிக்கல்

பதவியை பறிகொடுத்த உணவு அமைச்சர், பதவி பறிபோனது பற்றி மிக்கச் சந்தோஷப்படுகிருராம். ஏனெனில் உணவு அமைச்சர் பதவி சிக்கல் நிறைந்தது என்கிருர் அவர்.

சிக்கலுக்கான மிக முக்கிய காரணமாக குறிப்பிட்டது மத்திய அரசு, மாநில அரசின் தேவைகளுக்குத் தகுந்தவாறுஉணவுத்தானியங்களை அனுப்புவதில்லை என்றும் அவைகள்பற்றி மத்திய அரசு கவலைப்படுவதில்லை என்றும் அவர் குறிப்பிட்டார்.

## கேரளாவில் அரசு ஊழியர், ஆசிரியர்களின் போர்க்குரல்

திருவனந்தபுரம். ஜன. 17— சம்பளத் திருத்தம் கேரள அரசால் கொண்டுவரப்படாவிட்டால் கேரள அரசாங்க ஊழியர்களும், ஆசிரியர்களும் பெரும் போராட்டத்தை ஆரம்பிக்கப் போவதாக அறிவிக்கப்பட்டுள்ளது.

கோரிக்கை நிறைவேறும் வரை வேலைநிறுத்தப் போராட்டம் நடத்துவகென ஆசிரியர்களின், ஊழியர்களின். சங்கப் பிரதிநிதிகளின் கூட்டுக் கவுன்சிலில் கடந்த ஞாயிற்றுக் கிழமை முடிவு செய்யப்பட்டது.

மேலும் ஆசிரியர்களின். ஊழியர்களின் பிரதிநிதிகளால் பெரும் போராட்டத்தின் முன்னேடியாக ஜன. 26ல் ஒருநாள் அடையாள சத்தியாக்கிரகம் கேரள அரசாங்க தலைமைச் செயலகத்தின் முன் நடைபெறும் என்றும் முடிவு செய்யப்பட்டது.

சம்பள திருத்தக் கோரிக்கை ஏற்றுக் கொள்ளப்படாவிட்டால் கோரிக்கை நிறைவேறும் வரை நடைபெறும் வேலை நிறுத்தம் மார்ச் மாதத்தில் ஆரம்பிக்கப்படும் என்றும் அக்கூட்டு கவுன்சில் தீர்மானித்துள்ளது.

# காலவரையற்ற வேலை நிறுத்தத்துக்கு தயாராகுக
## பஞ்சாலைத் தொழிலாளர்களுக்கு ஐ.என்.டி.யூ.சி. வேண்டுகோள்

**மதுரை, ஜன. 16— மதுரைதேசிய பஞ்சாலைத் தொழிலாளர் சங்கத்தின் (ஐ. என். டி. யூ. சி.) பொதுச்செயலாளர் திரு எம். எஸ் ராமச்சந்திரன் விடுத்துள்ள அறிக்கையை அப்படியே பிரசுரிக்கிறோம்.**

மதுரையில் இன்று காலை டி. வி. எஸ். தொழிலாளர் சங்க அலுவலகத்தில்நடைபெற்ற ஐ. என். டி. யூ. சி. யுடன் இணைக்கப்பட்ட தமிழக பஞ்சாலைத் தொழிலாளர் சங்கங்களின் பிரதிநிதிகளின் மாநாட்டில், கடந்த இரண்டு ஆண்டு காலமாக தீர்வு காணப்படாமல் இருக்கின்ற பஞ்சாலைத் தொழிலாளாகளின் அடிப்படைச் சம்பள உயர்வு, பஞ்சப்படி உயர்வு ஆகிய கோரிக்கைகள் மீது ஜனவரி மாத இறுதிக்குள் தமிழக அரசு தகுந்த நடவடிக்கை எடுக்காவிட்டால் தமிழகத்தில் உள்ள எல்லாப பஞ்சாலைகளிலும் காலவரையறையின்றி வேலை நிறுத்தத்திற்கு தயாராக இருக்குமாறு தொழிலாளர்களுக்கு வேண்டுகோள் விடுந்தது.

இக்கூட்டத்திற்கு கோவை, சென்னை, செங்கல்பட்டு, சேலம், தஞ்சாவூர், திருச்சி. மதுரை. ராமநாதபுரம், திருநெல்வேலி, ஆகிய மாவட்டங்களிலிருந்து பஞ்சாலைத்தொழிற் சங்கங்களைச் சேர்ந்தசுமார் 150 பிரதிநிதிகள் வந்திருந்தனர்.

தமிழ்நாடு ஐ. என். டி. யூ. சி. அமைப்புச செயலாளரும். மதுரை தேசீய பஞ்சாலைத்தொழிலாளர் சங்கப பொதுச்செயலாளரும்ஆன திரு எம். எஸ். ராமச்சந்திரன் பிரதிநிதிகளைவரவேற்று தமிழ்நாடு பஞ்சாலை சமரசக் குழுவின் பரிந்துரைகளை விளக்கி பிரதிநிதிகளின் கருத்துக்களைத் தெளிவாகக் கூறுமாறு கேட்டுக் கொண்டார். கோவை ஐ என்.டி. யூ. சி. தலைவர் திரு கே. ராமசாமி நாயுடு மாநாட்டிற்கு தலைமை வகித்தார். தலைவர் முனனுரையில் 1972.ம் ஆண்டு பிப்ரவரி. மார்ச் மாதங்களில் நடைபெற்ற வேலை நிறுத்தப் போராட்டத்தின்விளைவுகளை விளக்கி சமரசக்குழுவின் சிபாரிசுகள் ஏகமனதாக இல்லாததால் ஏற்பட்டுள்ள சூழ்நிலைகளையும் விளக்கிப் பேசினர்.

தலைவர் முன்னுரைக்குப் பின் மேலூர், உடுமலைப் பேட்டை. மதுரை, மணப்பாரை. சேலம், கோவை, ராஜபாளையம், திருநெல்வேலி ஆகிய ஊர்களைச் சேர்ந்தபிரதிநிதிகள் தங்கள் ஆலைத தொழிலாளர்களின் கருத்துக்களை தெளிவாக எடுத்துக் கூறினர்கள்.

பிரதிநிதிகளின் விவாதத்திறகுப் பின்னர் அடியிற கண்ட தீர்மானத்தைப்பிரேரேபித்து கோவை திரு பி. எல். சுப்பையா அவாகள் பேசினர்கள். தீர்மானத்தை திரு பி. கோவிந்த ராஜா, (தலைவர், தேசீய பஞ்சாலை தொழிலாளர் சங்கம், ராஜபாளையம்) அவர்கள் ஆதரித்துப்பேசினர்.

### தீர்மானம்

தமிழ்நாடுதேசீய தொழிற் சங்க காங்கிரசுடன் இணைக்கப்பட்டுள்ள பஞ்சாலை தொழிலாளர்கள் சங்கங்களின் பிரதிநிதிகள் அடங்கிய இம்மாநாடு தமிழகப் பஞ்சாலை சமரசக்குழு ஏகமனதாக முடிவு எடுக்காதது பற்றி ஆழ்ந்த வருத்தத்தையும், ஏமாற்றத்தையும் தெரிவித்துக் கொள்கிறது.

1972-ம் ஆண்டு பிப்ரவரி மாதத்தில் அடிப்படை சம்பள உயர்வு கேட்டு தமிழகம் அனைத்திலும் பஞ்சாலை தொழிலில் நடைபெற்ற நியாயமான போராட்டம் அரசின் நடவடிக்கைகளையும பஞ்சாலை சமரசக்குழுவின் முடிவுகளையும் எதிர்பார்த்து கைவிடப்பட்டது. பஞ்சாலைத் தொழிலாளர்களைவிட குறைந்த ஊதியம் வாங்கி வந்த பிற பல தொழில்களைச் சேர்ந்த தொழிலாளர்கள் இன்று பஞ்சாலைத் தொழிலாளர்களைவிட அதிக ஊதியம் வாங்கும் நிலை ஏற்பட்டுள்ளது. சென்ற வேலை நிறுத்தத்திற்கு பிறகு அத்தியாவசிய பொருட்களின் விலைகளில் அநியாய உயர்வு ஏற்பட்டு பஞ்சாலைத தொழிலாளர்களின வாங்கும் சக்தியை பெருமளவில பாதித்துள்ளது. இதுநாள வரையிலும் தாமதப்படுத்தப்பட்டு வந்த கோரிக்கைகளை மேலும் தாமதப்படுத்துவது சாததியமானதல்ல என்பதை, இம்மாநாடு தமிழக அரசுக்கும் பஞ்சாலை நிர்வாகங்களுக்கும எச்சரிக்க விரும்புகிறது.

### தகுந்த நடவடிக்கை

இங்கிலையில் பஞ்சாலை சமரசக்குழு தொழிலாளர் பிரதிநிதிகளின சிபாரிசுகளின் அடிப்படையில் இம்மாத இறுதிக்குள் இப்பிரச்னைக்கு நியாயமான தீர்வு காண தகுந்த நடவடிக்கை எடுக்குமாறுதமிழக அரசை இம்மாநாடு வற்புறுத்துகிறது.

31—1—1974—க்குள் தமிழக அரசின் உரிய நடவடிக்கையின மூலம நியாயம் கிடைக்காவிட்டால் சகோதர தொழிற்சங்கங்களுடன் சேர்ந்து வேலை நிறுத்தம் உட்பட சகலவிதமான தேவையான நடவடிக்கைகளிலும் ஈடுபடுமாறு தமிழகத்திலுள்ள எல்லாப பஞ்சாலை தொழிலாளர்களையும் இம்மாநாடு அறைகூவி அழைக்கிறது.

தமிழகம் தழுவிய பஞ்சாலைத் தொழிலாளர்களின ஒன்றுபட்டபோராட்டத்தை சகோதர தொழிற்சங்கங்களுடன் இணைந்து தீவிரப்படுத்த தகுந்த நடவடிக்கைகளை மேற்கொள்ள மாநில அளவில் அடியிற்கண்ட செயல்கமிட்டியை அமைப்பதென இம்மாநாடு தீர்மானிக்கிறது.

திரு கே. ராமசாமி நாயுடு
திரு பி. எஸ். சுப்பையா கோயம்புத்தூர்
திரு கே. என். குருசாமி உடுமலைப்பேட்டை
திரு எம். எஸ். ராமச்சந்திரன்
திரு. எம். வேலு மதுரை
திரு பி. கோவிந்தராஜா ராஜபாளையம்
திரு ராமமூர்த்தி சேலம்

நகர் மட்டத்திலும், தொழிற்சாலைகள் அளவிலும் செயல் கமிட்டிகளை அமைத்துக்கொள்ள சம்பந்தப்பட்ட தொழிற்சங்கங்களுக்கு அதிகாரம் அளிக்கப்பட்டது.

## கள்ளச் சந்தையில் உரம்
# குத்தகை விவசாயிகளுக்கு உரம் கிடையாது

ஸ்ரீவைகுண்டம், ஜன. 16— ஸ்ரீவைகுண்டம் வட்டாரத்தில் ஆயிரக்கணக்கான ஏக்கர் நஞ்சை நிலங்களில் ஐ ஆர் 8, ஐ ஆர் 20 ஐ ஆர். 22, ஆகிய நெற்பயிர்கள் சாகுபடியாகிஉள்ளன. ஆனல் அதற்குத் தேவையாகவுள்ள யூரியா போன்ற அத்தியாவசியமான ரசாயன உரங்கள் அ சாங்கப் பிச்சார விகிதத்தில் பஞ்சாயத்து யூனியனல் சப்ளை செய்யப்படவில்லை. விவசாயிகளின் குறைந்தபட்சத் தேவைக்கூட யூனியன் விவசாய அதிகாரிகள் மேற்பார்வையில் சப்ளை செய்யும் யூரியா பூர்த்தி செய்யவில்லை.

அதிக உற்பத்திக்கு ஐ. ஆர். 8- ரகங்களைப் பயிரிடுங்கள் என்று சொல்லும் போதே அவற்றிற்குத் தேவையான ரசாயன உரங்களையும் அரசே உற்பத்தி செய்து தரவேண்டும். ஆனல்போதிய யூரியா சப்ளை செய்யப்படவில்லை. அல்லது ஐ. ஆர். 8 ரகங்களைப் பயிரிடுவதை நிறுத்திக் கொள்ளுங்கள். போதிய யூரியா கிடைக்காது எனருவது விவசாயிகளுக்கு அரசு முன்னறிவிப்புச் செய்து இருக்க வேண்டும். இவற்றில் எதையுமே அரசு செய்யவில்லை

### குத்தகை விவசாயிகளுக்கு உரம் இல்லை

ஏராளமாக உரக் கார்டுகளை வழங்கியுள்ள போதிலும் கடடுக் குத்தகை விவசாயிகளுக்கு கார்டுகள் கொடுப்பது கிடையாது. இம்முறையினல் கிராம சேவக்குகளிடமே உரக் கார்டுகள் மிஞ்சுகின்றன. பஞ்சாயத்துத் தலைவர்கள், ஆளும் கட்சிப் பிரமுகர்களின் நிர்ப்பந்தங்களுக்கு யூனியன அதிகாரிகளும நெருக்கப்படுகிருர்கள்.

எனவே கள்ளமார்க்கட் பேர்வழிகளுக்கு கிராம சேவக் முதல் யூனியன் விவசாயப்பகுதி ஊழியர்கள் அதிகாரிகள் அனைவரும் உடந்தையாக இருக்கிருர்கள். வெளியூர் பட்டாதார்களின் பயனபடுத்தப்படாத கார்டுகளை கிராம சேவக்குகளின் ஒத்துழைப்புடன் பெற்று எல்லா உரங்களையும் வாங்கி கள்ளச்சந்தைக்கு கொண்டுசெல்கின்றனர்.

கிராம சேவக்குகளில் பெரும்பாலோர் தாங்கள் சேவை செய்யவேண்டிய கிராமங்களையே தெரியாவர்கள் வீட்டில் இருந்து கொண்டும், கர்ணங்களைக் கேட்டும் சில பல தகவல்களை வைத்து ஆபீசுக்கு டைரி அனுப்பிக்கொண்டிருப்பதே அவர்களின் வேலையாக இருக்கிறது.

எனவே பெரும்பாலான கிராம சேவக்குகளுக்கு பட்டாதார்களையோ, குத்தகை விவசாயிகளையோ தெரிந்து வைத்து இருப்பதற்கு சாத்தியமோ இல்லை. அதனல் அநேக கிராம சேவககுகள் உரக்காடுகளை மொத்தமாக வாடகைக்கு விட்டு, திரும்பவும் பெற்றுக்கொள்வதாகவும் சொல்லப்படுகிறது. இதனல் உண்மையான விவசாயிகளுக்கு உரம் கிடைக்காமல் மூன்று மடங்கு கூடுதல் விலை கொடுதது வாங்க நேரிடுகிறது.

### கூட்டுறவு சங்க மோசடி

வேலூர் புதுக்குடி கூட்டுறவுச் சங்கம் என்று ஒரு ஸ்தாபனம் இருக்கிறது. இந்த ஒருவிதமான நூதன மோசடி நடைபெற்று வருவதாகச் சொல்லப் படுகிறது. முதல்நாள கார்டுகளை வாங்கி வைத்துக் கொள்கிருர்கள். மறுநாள் உரம் ஸ்டாக் இல்லை என்று கார்டுகளைதிருப்பிக தந்து விடுகிருர்கள். இதற்கு மத்தியில் ஏராளமான கார்டுகளில்உரம்கொடுத்து விட்டதற்குரிய சீல்களை அடித்து விடுகிருர்கள்.

உரம் கிடைக்காமல் கார்டுகளைப் பெற்ற விவசாயிகள் இந்த ஏமாற்று வேலைகளினல் ஆத்திரம் அடைந்து கூட்டமாகச் சென்று யூனியன் ஆணையாளரிடம கார்டு மோசடி பற்றி புகார் செய்தனர்.

ஆணையாளரும், விவசாய அதிகாரியும் சம்பந்தப்பட்ட கூட்டுறவுச் சங்கத்திற்கு சென்று பரிசோதனையிட்டதில் அங்கு இவ்விதமாக 67 யூரியா மூடைகள் கடத்தப்பட்டிருப்பது புலப்பட்டது. இது விஷயமாக விவசாய அதிகாரி மேலதிகாரிகளுக்கு புகார் செய்திருப்பதாகவும் தெரிய வருகிறது. ஆனல் அந்தக் கூட்டுறவு சங்கநிர்வாகிகள் மீது எத்தகைய நடவடிக்கைகளும எடுக்கப்பட்டதாகத்தெரிய வில்லை.

இம்மாதிரியாக இவ்வட்டாரத்தில் உள்ள பல கூட்டுறவுச் சங்கங்களில் நடைபெற்று வருவதாகவும பரவலாகப்பேசிக் கொள்ளப்படுகிறது.

### உரம் கிடைக்காமல் உற்பத்தி குறையும் அபாயம்

ஸ்ரீவைகுண்டம் ஆயிரக்கணக்கான ஏக்கர் நிலங்களில் ஐ ஆர். 8 ரகங்களை பயிர் செய்து விட்டு விவசாயிகளும், சிறு நிலச்சுவான்களும் திண்டாடுகிருர்கள். அவற்றிற்குத் தேவையானயூரியா நிர்ணய விலையில் கிடைக்கவில்லை. இதனல் பலர்மேல் உரம் போடவில்லை. எனவே இந்த அறுவடையின் போது போதிய விளச்சலை எதிர் பார்க்கமுடியாது என்று இப்போதே விவசாயிகள் அபாயச்சங்கு ஊத ஆரம்பித்து விட்டார்கள். இதையும் அரசு உணர்ந்ததாகத் தெரியவில்லை.

உர விநியோக ஊழல்கள் நீங்குவதற்குரிய வழிகள் என்ன. ரசாயன உரங்களின் விலைகளை மட்டும் நிர்ணயித்து விட்டால் மட்டும் போதுமா? அவற்றின் சீரான விநியோகத்திற்கும் முறையான ஏற்பாடுகளைச் செய்ய வேண்டாமா?

முதலில் உரக்கார்டுகளின் விநியோகத்தை முறைப்படுத்த வேண்டும். கிராம சேவக்குகளை இவ் விஷயத்தில் நம்பிப்பயன் இல்லை விவசாய அதிகாரிகளும், கிராம அதிகாரிகளும் சர்வகட்சிக் குழுவினர்களும் இணைந்தமுறையில் ஒவ்வொரு கிராமங்களுக்கும் நேரில் சென்று உரக்கார்டுகள் விநியோகத்தைச் சீரமைக்கவேண்டும். குத்தகை விவசாயிகளுக்கும். நேரடியாகச் சாகுபடி செய்யும் சிறு நிலச்சுவான்களுக்கும் உரம் கிடைக்க இது பயனுள்ள வழியாகும்.

கூட்டுறவுச் சங்கங்களின் மூலமே சகலவிதமான உர விநியோகமும் நடைபெற வேண்டும். அதன் விநியோகத்தில் போதிய கண்காணிப்புடனும் கண்டிப்புடனும் அரசு மேற்பார்வையிடுவதும் அவசர அவசியமாகும். தனியார் நிறுவனங்களின்மூலம் உரவினியோகம் செய்யப்படுவதற்கும் இனி முடிவு கட்ட வேண்டும்.

## மதுரை தாலுகாவில் கொடியேற்றுவிழா நிகழ்ச்சிகள்

மாடக்குளம், ஜன.12— மதுரை வடக்குத்தாலுகாவில் கடைசியில் இருககும மாங்குளம் கிராமத்தில் ஜன 14-ல் கம்யூனிஸ்ட்கட்சி (மார்க்சிஸ்ட்)யின் கொடியேற்று விழா நடந்தது.

பூலம்பட்டி பஞ்சாயத்து போர்டு தலைவர் எம்.வி.எம. ராமசாமி, மூக்கன் ஆகியோர் முன்னிலையில் மாங்குளம் தோழர் தமிழரசன் தலைமையில் தோழா வப்பிய தேவன் அவர்கள் கொடியேற்றி வைத்தார்கள்.

தோழர் எ. போஸ் (தாலுகா கமிட்டி உறுப்பினர்) இறுதியில் பேசினர். முடிவில் இனிப்பு வழங்கப்பட்டது. இந்த விழாவிறகு பொருசுபட்டி மீனாட்சிபுரம் ஆகிய கிராமங்களிலிருந்து 30 தோழர்கள் சைககிள் மூலம வந்திருந்தார்கள். விழாவில் நூற்றுக்கு மேற்பட்டோர் கலந்து கொண்டார்கள்.

### திருவுழான்பட்டி

மதுரை வடக்கு தாலுகாவில் அப்பன்திருப்பதி கிராமத்திறகு அருகே உள்ள திருவுழான்பட்டி கிராமத்தில மதியம் 12 மணிக்கு கொடியேற்று விழா நடந்தது. கொடியேறறு விழாவிற்கு தோழர்கே. சன்னாசி தலைமை தாங்கினர்கள்.

தோழர் வி. சுந்தரராஜ் நரசிங்கம பஞ்சாயத்து போர்டு தலைவர் கொடியேற்றி வைத்தார். பொருசுபட்டி தோழர்கள் செல்லப்பாண்டி, சாமிக்கண்ணு, மதுரை பாண்டி (பொருசுபட்டி கிளை செயலாளர்) அவாகள் பேசிய பின்பு தோழர் எம். கணபதி (மதுரை தாலுகா கமிட்டி செயறகுழு உறுப்பினா

(4-ம் பக்கம் பார்க்க)

## திருப்பரங்குன்றத்தில் தேர்தல் நிதி அளிப்பு விழா

திருப்பறங்குன்றம். ஜனவரி. 14— மதுரைத்தாலுகாவில் திருப்பரங்குன்றத்தில் மார்க்ஸ் வாலிபா சங்க 3 வது ஆண்டுவிழாவும் கோவை. தேர்தல் நிதி அளிப்பு விழாவும் பொங்கல் விழாவும் நடந்தது.

காலையில் விவசாயசங்கத் தலைவர் தோழர் கருப்பையா தலைமையில் பொங்கல்வழங்கப்பட்டது, இரவில் மலைக்குப்போகும் பாதையில் பொதுக்கூட்டம தோழர் கே. முத்துக்கருப்பன் தலைமையில நடந்தது. தோழர்கள் பி வரதராஜன், பாலன், கே. கந்தசாமி; கே. சுப்பையா, நனமாறன ஐ. மாயாண்டிபாரதி ஆகியோர் பேசினர். கோவை தேர்தல் நிதியாக 80 முதல் தவணையாக தோழர் ஐ.மாபா. அவர்களிடம் வழங்கப்பட்டது.

## புதுடெல்லியில் சோவியத் திரைப்படவிழா

புதுடெல்லி, ஜன. 18— இம்மாதம் 19 முதல் 25ம் தேதி வரை புதுடெல்லியில் சோவியத் திரைப்படவிழா நடைபெறவிருக்கிறது. இந்திய—சோவியத் கலாச்சார பரிவர்த்தனை திட்டத்தின் கீழ் நடைபெறுகிறது இத் திரைப்பட விழா.

இவ்விழாவின்போது ஏழு கதைப் படங்களும் 8 துண்டுப் படங்களும திரையிடப்படும்.

டில்லியில் நடைபெற்ற பின், சென்னை, பம்பாய், கல்கத்தா, மற்றும் ஏழு நகரங்களில் இத் திரைப்பட விழா நடைபெறும்.

# கடவுள் பக்தர்களின் திருவிளையாடல்கள்

**சென்னையில் 7 பேரை கொலை செய்த விஷ ஊசி வழக்கில் குற்றம் சாட்டப்பட்ட வைத்தி என்பவர் கொள்ளையடித்த பணத்தில் திருப்பதி வெங்கிடாசலபதிக்கு கல்யாணம் நடத்திவைத்தாராம்.**

**கம்பத்தில் கள்ள நோட்டடித்ததற்காக கைது செய்யப்பட்ட நித்தியானந்தசாமி என்ற திருமலை சாமாண்டி ரூ. 15 ஆயிரம் செலவு செய்து சபரிமலை ஐயப்பனுக்கு கோயில் கட்டினராம்.**

# நாடெங்கும் தீவிரமடையும் போராட்டக் களங்கள்

இந்தியாவே ஒரு போராட்டக்களமாகிவிட்டது நாட்கள் செல்லச் செல்ல, தொழிலாளர்கள், விவசாயிகள், மாணவர்கள், அரசு ஊழியர்கள் போராட்டங்கள் தீவிரமடைகின்றன. விலைவாசி விண்ணைமுட்டி நிற்கும்போது உழைக்கும் வர்க்கத்துக்கும் போராட்டத்தைத்தவிர வேறு வழியில்லையல்லவா! நாடெங்கும் நடைபெறும் போராட்டங்களைப்பற்றிய சுருக்கமானவிபரத்தையும் காண்போம்.

## பம்பாயில் வேலைநிறுத்தம்

துணிமில்களின் நகரமான பம்பாயில் துணி மில்கள் எல்லாம் மூடிக் கிடக்கின்றன. இடதுசாரிக் கட்சிகளின் அறைகூவலுக்கிணங்க துணிமில் தொழிலாளர்கள் வேலை நிறுத்தத்தில் இறங்கியுள்ளனர். 'ராஷ்டிரீயா மில் மஸ்தூர் சங்கம்'' என்ற ஒரு அமைப்பு இந்திரா காங்கிரஸ் -சிவசேனை ஆகியவற்றின் துணையுடன் வேலை நிறுத்தத்தை உடைக்க எடுத்துக்கொண்ட முயற்சிகள் தோற்கடிக்கப்பட்டுவிட்டன. பலமில்கள்முன்னரும் கம்யூனிஸ்ட் தொழிலாளர்களை காங்கிரஸ் குண்டர்கள் தாக்குகின்றனர்.

துணி மில் தொழிலாளர்கள் மட்டுமல்ல பம்பாயில் வேலைநிறுத்தக் களத்தில் உள்ளது. ஜனவரி 3ம் தேதி பம்பாய் மத்திய ரயில்வே புகை வண்டிகள் ஓடவில்லை. கிக்னல்மேன்களும், இஞ்சின் டிரைவர்களும் திடீர் வேலை நிறுத்தம் நடத்தினர். ஜனவரி 2ம்தேதியன்று நடந்த பந்தில் கலந்துகொண்டதற்காக சில ரயில் ஊழியர்கள் சஸ்பென்ட் செய்யப்பட்டதைக் கண்டித்துதான் இந்த வேலை நிறுத்தம் நடந்தது. சஸ்பென்ஷன் உத்திரவுகள் ரத்து செய்யப்படவில்லையென்ருல் மத்திய பம்பாய் ரயில் போக்குவரத்து முழுவதும் ஸ்தம்பிக்கும்என்றுசோசலிஸ்ட் தலைவர் ஜார்ஜ் பெர்னண்டஸ் எச்சரிக்கை விடுத்துள்ளார்.

## மேற்கு வங்கத்தில் விவசாயத் தொழிலாளர் போராட்டம்

மேற்குவங்க கிராமங்களில் பயங்கரமான அடக்குமுறைகளை தகர்த்தெறிந்து விவசாயத் தொழிலாளர்கள் கூலிஉயர்வுப்போராட்டம் நடத்துகின்றனர். 24 பர்கானு மாவட்டத்தில் விவசாயத் தொழிலாளர்களின் நீண்ட போராட்டம் காரணமாக கூலி உயர்வு கிடைத்தது. ரூ. 1-50-ம உணவும்தான் இதுவரையிலும் அவர்களுக்கு கிடைத்த கூலி. இனிமேல் அவர்களுக்கு ரூ. 2-50-ம் உணவும் கூலியாகக் கிடைக்கும, 'பான்குற' மாவட்டத்தில் விவசாயத் தொழிலாளர்கள் நடத்திய 8 நாள் வேலைநிறுத்தம் காரணமாக ஆண்களுக்கு 3 ரூபாயாகவும் பெண்களுக்கு 2 ரூபாயாகவும் கூலி உயர்ந்துள்ளது.

24 பர்கானு மாவட்டத்தில் ஸ்ரீ பகவதி பேப்பர் போர்டு மில் தொழிலாளர்களின் சங்கத்தை தகர்க்க போலீசும் காங்கிரஸ் குண்டர்களும் கூட்டு சேர்ந்து நடத்தும் முயற்சிகளை எதிர்த்து தொழிலாளர்கள் உறுதியுடன் போராடுகின்றனர். இந்த பேப்பர் மில் தொழிலாளர்கள் சி.ஐ.டி.யூ, தலைமையில் போனஸ் உயர்வுக்காகப் போராடியதுதான் அவர்கள்செய்த குற்றமாகும்!

## கிளாக்சோ தொழிலாளர் கிளர்ச்சி

இந்தியாவின் பல்வேறு பகுதிகளிலுள்ள கிளாக்சோ சோதனைக்கூட தொழிலாளர்கள் டிசம்பர் 19-ம் தேதியிலிருந்து 12 நாட்கள் தொடர் சத்தியாக்கிரமம் நடத்தினர். பம்பாய் தலைமை அலுவலகம், கல்கத்தா, டெல்லி சென்னை நகரங்களிலுள்ள கிளை அலுவலகங்கள் ஆகியவற்றில் வேலைபார்க்கும் தொழிலாளர்கள் இந்த போராட்டத்தில் கலந்து கொண்டனர். மேலும் அவர்கள் டிசம்பர் 31-ம்தேதி 1 நாள் வேலை நிறுத்தம் செய்து அனைத்து கிளாக்சோக்களையும் ஸ்தம்பிக்க வைத்தனர். மேலும் போராட்டம் வேறு வடிவங்களில் தொடருமென்று அவர்கள் அறிவித்துள்ளனர்,

## எல் ஐ சி ஊழியர்கள் போராட்டம்

டிசம்பர் 28ம் தேதி ஒரு நாள் அடையாளவேலைநிறுத்தம் நடத்தியது வாயிலாக தீவிரமடைந்தஎல்.ஐ,சி.ஊழியர்கள்கிளர்ச்சியானது சஸ்பென்ஷன் லாக்—அவுட் ஆகியவற்றை சந்தித்து முன்னேறுகிறது கதவடைப்பு நீக்கப்பட்டாலும் -சம்பள உயர்வு கிடைக்கும்வரை போராடுவோம் என்று எல். ஐ. சி. ஊழியர்கள் அறிவித்துள்ளது குறிப்பிடத்தக்கது.

இந்தியன் ஏர்லைன்ஸ் ஊழியர்கள் வேலை நிறுத்தம் காரணமாக ஏர் லைன்ஸ் லாக்அவுட் செய்யப்பட்டுள்ளது.

பாட்னாவில் தாஜபங்கா, ராஞ்சி ஆகிய இடங்களிலுள்ள மருத்துவக் கல்லூரிகளில் 30 நாள் நீடித்த வேலை நிறுததப் போராட்டம் ஜனவரி 6-ம் தேதி முடிவடைந்தது. 900 பயிற்சி மருத்துவர்களும் மருத்துவ மேற்படிப்பு மாணவர்களும் கூட்டாக நடத்திய இப் போராட்டம காரணமாக இந்த இரு மருத்துவக் கல்லூரிகளுடனும் இணைக்கப்பட்ட ஆஸ்பத்திரிகள் அனைத்தும 30 நாட்கள் ஸ்தம்பித்துக் கிடந்தன.

இறுதியில் இவர்களுக்கு ரூ 100,மாத அலவன்சில் அதிகரிதது் கொடுக்க வேண்டிய நிர்ப்பந்தநிலை அரசுக்கு ஏற்பட்டது.

ஜனவரி இறுதியில் நீண்ட போராட்டங்கள நடத்த கல்லூரி ஆசிரியர்கள்: ஜூனியர் டாக்டர்கள். சணல ஆலைத் தொழிலாளர் பிராவிடண்ட்பண்ட் ஊழியர்கள் ஆகியோர் தயாராகியுள்ளனர்.

## ஆசிரியர், டாக்டர்

ஜன்வரி 15-ம் தேதி சம்பள உயர்வு, வேலைப் பாதுகாப்பு, ஆகிய கோரிக்கைக்களுக்காக இந்தியாவின் பல்வேறு பகுதிகளில் கல்லூரி ஆசிரியர்கள் நடத்திய ஒருநாள் வேலை நிறுத்தம் குறிப்பிடத்தக்கதாகும்.

வரும் நாடாளுமன்ற பட்ஜெட் கூட்டகாலத்தில் நாடாளுமன்றம் நோக்கி பிரமாண்ட பேரணியை கல்லூரி ஆசிரியர்கள் நடத்துவர் என்று அவர்களது அகில இந்திய செயலாளர் அமியா போஸ் தெரிவித்துள்ளார்.

டெல்லி பயிற்சி டாக்டர்கள், நர்சுகள் போராட்டம் நீடிக்கிறது.

ஜனவரி 21-ம் தேதியில் டெல்லியில் தொடங்கவிருக்கும் அகில இந்திய அவுஸ் சர்ஜன் (பயிற்சி மருத்துவர்கள்) மாநாடு சம்பள உயர்வு கோரி நாடு தழுவிய போராட்டம் நடத்த முடிவெடுக்கப் போகிறது. இந்தியாவெங்குமுள்ள பிராவிடண்ட் ஊழியர்கள் 8 அம்சக் கோரிக்கையை முன்வைத்து போராட்டம் நடத்தவிருக்கின்றனர்.

## சணல்.பஞ்சாலை தொழிலாளர்

நாடெங்கும் உள்ள சணல் ஆலைத் தொழிலாளர்கள் ஜனவரி 14ம்தேதி துவங்கிய வேலைநிறுத்தமும் வெற்றிகரமாக நீடிக்கிறது. சணல் ஆலைகளை அரசு ஏற்க வேண்டும், சீரான சம்பளத் திட்டம் அமுல்படுத்த வேண்டும், 20 சத வீத வருடாந்தர போனஸ் கொடுத்தல் போன்றவை போராடும் சணல் ஆலைத் தொழிலாளர்களின் கோரிக்கைகள்.

தமிழகத்தில் பஞ்சாலைத்தொழிலாளர்கள் தமிழகம் தழுவிய வேலை நிறுத்தத்துக்கு தயாராகி வருகின்றனர்.

போனஸ்கோரி குமரி மாவட்ட அரசுப் போக்குவரத்துத் தொழிலாளர்கள் அக்டோபர் 15-ம்தேதி தொடங்கிய வேலை நிறுத்தப் போராட்டத்தை தமிழக அரசு மிக மோசமான முறையில் அணுகியுள்ளது.

போராட்டத்தை முடிவுக்குக்கொண்டுவர எந்த நடவடிக்கைகளும் எடுக்காதது மட்டுமல்ல பொய் அறிக்கைகளை விடுத்து இப்போராட்டத்தை திசை திருப்பவும் தமிழக அமைச்சர்கள் முயல்கின்றனர்.

## சிம்சன் தொழிலாளர்

சென்னையில் போராட்ட வரலாறு படைத்த சிம்சன் ஊழியர்கள், முன்னணி ஊழியர்களின் வேலை நீக்க உத்தரவுகளை ரத்து செய்யக் கோரி எந்நேரமும் வேலை நிறுத்தத்தில் இறங்க தயாராகியுள்ளனர். மேலும் சென்னை நகரில் எம். எம். ரப்பர் பாக்டரி தொழிலாளர்கள் போராட்டமும் நடைபெறுகிறது. சென்னை, கொந்தளிக்கும் சென்னையாகிவிட்டது.

மதுரையில் செல்லூர் நெசவாளர்கள், மதுரை நகர மோட்டா ரக நெசவாளர்கள் நடத்தும் வீரஞ்செறிந்த போராட்டங்கள் வாயிலாக அவர்களுக்கு கூலி உயர்வு கிடைத்துள்ளது. இப்போராட்டங்களில் பெண்கள், கைக்குழந்தைகளுடன் மறியல் நடத்திச் சிறை சென்றது குறிப்பிடத்தக்கது.

மதுரை நகர் பவர்லூம் தொழிலாளர்களும், அவனியாபுரம் பகுதி நெசவாளர்களும் பஞ்சப்படி, சம்பள உயர்வு கோரி தொடர்ந்து வேலை நிறுத்தம் செய்கின்றனர்.

## கேரளத்தில்

வலது கம்யூனிஸ்ட் தலைமையில் ஆட்சி நடக்கும் கேரளமும் இப் போராட்டங்களுக்கு விதிவிலக்கல்ல.

கேரள தலைநகரில் ஊர்வலங்கள். ஆர்ப்பாட்டங்கள் நடக்காத நாட்களே கிடையாது.

பாலக்காடு - விவசாயத் தொழிலாளர்கள் மூன்று மாத காலமாக நடத்தும் உரிமைப் போர் நீடிக்கிறது. கூலிஉயர்வுதான் இவர்கள் முன் வைத்துள்ள முக்கியக் கோரிக்கை.

ஜனவரி 3-ம் தேதி ஆசிரியர்கள்,என் ஜி. ஓ.க்கள் கூட்டுக் கமிட்டி வேண்டுகோளுக் கிணங்க எல்லா ஜில்லா தலைநகர்களிலும் அரசு ஊழியர்கள் "தர்ணு" நடத்தினர்.

டிசம்பர் 30-ந் தேதி மின்சார ஊழியர்கள் 30 ரூ. இடைக்கால நிவாரணம் கோரி சத்தியாக்கிரகம் நடத்தினர்.

சங்கம் அமைக்கும் உரிமை மறுக்கப்பட்டதைக் கண்டித்து லட்சத் தீவைச் சேர்ந்த 80 தொழிலாளர்களும் அவர்களது குடும்பத்தினரும் கோழிக்கோட்டிலுள்ள லட்சத்தீவு நிர்வாக அதிகாரியின் அலுவலகம் முன் நடத்தும் சத்தியாக்கிரக போராட்டம் 470 நாட்களையும் தாண்டிவிட்டது.

ஆம்! இந்தப் போராட்டங்கள் இந்திரா அரசுக்கு எதிரான ஒரு பெரும் சவாலாக ஓங்கி வளர்கின்றன.

# கடைசி நேரத்தில்...

(1—ம் பக்க தொடர்ச்சி)

அப்படிப்பட்ட உடன்பாட்டை அவர் விரும்புகிருர் என்றே தோன்றுகிறது.

கேள்வி: தேர்தலுக்காக அப்படி ஒரு ஏற்பாட்டைசெய்து கொண்டால் என்ன?

பதில்: கொண்ட அரசியல் கொள்கையை, தேர்தலைமுன்னிட்டு மாசுபடுத்துவது, கறைப்படுத்துவதுஎன்ருகும். நமது கையைக் கொணடே நமது கண்களைக் குத்திக் கொள்வதாகும். அதைத்தான் சோசலிஸ்டுக் கட்சியின் தமிழ்நாட்டுத் தலைமை செய்ய முற்பட்டுள்ளது. அண்மைக்காலம் வரை தீவிரமாக தி மு க - எதிர்ப்பு பேசி வந்தார்கள். இந்த தி மு க - எதிர்ப்பில், வலது கம்யூனிஸ்டுகளைப் போல் சிண்டிகேட்டுடனும் உறவு கொள்ளத் தயங்கவில்லை அவர்கள். இப்பொழுது திடீரென்று தேர்தல் - காதல் பிறந்து திமுக வுடன் உறவாட புறப்பட்டுள்ளனர். வலது கம்யூனிஸ்டுகளோ, சந்தர்ப்பவாதத்துக்கு இலக்கணமே அவர்கள்தான். மணலியாரைப்பற்றி எனக்கு ஒரு நிகழ்ச்சி நினைவுக்கு வருகிறது.ஒன்ருகஇருந்தகட்சியில் திமுக—எதிர்ப்புப் படை வரிசைகளின் தளபதியாக இருந்தவர் அவர்! அதற்குப் பரிசாகத்தான் அவரை மாநிலச் செயலாளர் ஆக்கினுர்கள். இன்று, அவர் தி மு க வின் முற்போக்குத் தன்மைக்கு விளம்பர ஏஜண்டாக நிற்கிருர்! அவரது கட்சியில் அவரையும் திரு ஏ கே சுப்பையா எம்எல்ஏயும் தவிர வேறு யார் இருக்கிருர்கள் என்பது நாட்டுக்குத் தெரியவில்லை!

நாம் இந்தவிதமான சந்தர்ப்பவாதத்துக்கு இடமளிக்க முடியாது. நமது இன்றைய அரசியல்,மத்திய அரசின் அடிப்படை கொள்கைகளுக்கு எதிரானது மட்டுமல்ல; தமிழக தி.மு.க. அரசின் நடைமுறைக் கொள்கைகளுக்கும் எதிரானது. இந் நிலையைக் கைவிட இயலாது. வரஇருக்கும் தேர்தலில் நமது பிரச்சார இயக்கம் இந்த இரண்டையும எதிர்த்தே இருக்கும். அதே சமயத்தில் சிண்டிகேட்டின் பிற்போக்குத் தன்மையையும் அரசியல் சந்தர்ப்பவாதத்தையும் தோலுரித்துக் காட்டும்.

## தி மு கவுடன்சேரமாட்டோம்

கேள்வி:— மார்க்சிஸ்ட் கட்சி கோவை (மேற்கு) சட்டமன்ற தொகுதியில் போட்டியிடவில்லை. நாடாளுமன்ற தொகுதியில் தி மு க போட்டி போடவில்லை; சோஷலிஸ்டுக் கட்சியையோ வேறு எந்தக்கட்சியையோ ஆதரிக்கவும் இல்லை என்று வைத்துக் கொள்வோம. அந்நிலையில் நீங்கள் சட்டமன்றத் தேர்தலில் தி மு க வேட்பாளரை ஆதரிக்க இருப்பதாகவும், நாடாளுமன்றத்தேர்தலில் தி மு க வினர் உங்கள் வேட்பாளரை ஆதரிக்க இருப்பதாகவும் இதற்கான "உள் ஏற்பாடு" செய்து கொண்டிருப்பதாகவும் எதிரிகள் பிரச்சாரம் செய்ய மாட்டார்களா?

பதில்:— பிரசாரம் செய்வார்கள். ஏற்கனவே அப்படி ஒரு பிரசாரத்தை சில ஏடுகள் துவங்கியுள்ளன. அதிமுக தலைவர்களில் ஒருவரான நண்பர் மனோகரன் அவர்களும் அவ்வாறு பொருள்பட பேசியுள்ளார். ஆனல் நம்மைப் பொறுத்தமட்டில் தி மு க வுடன் நமக்கு எந்த "உள்.ஏற்பாடும்" இல்லை, வெளி ஏற்பாடும் இல்லை—இருக்க முடியாது.

தோல்வி உறுதி என்று தெரிந்துள்ள தி மு க வினர் கடைசி நேரத்தில் தங்களது வாக்குகளை காங்கிரசுக்கே அளிக்க முற்படுவார்கள். நம்மை ஆதரிக்க மாட்டார்கள். ஏனெனில் 1) தேர்தல் பிரசாரத்தில் நாம் தி மு க எதிர்ப்பில் உறுதி காட்டுபவர்கள். தி மு க வாக்குகளை எதிர்பார்த்து இதனை நாம தளர்த்த மாட்டோம் என்பது தி மு க தலைமைக்குத் தெரியும் 2) தி மு க தலைமையில்கம்யூனிஸ்ட்எதிர்ப்பு என்பது ஒரு முக்கியமான அம்சம்.

சென்ற 1969 நகரமன்ற தேர்தல்கள் சமயம் மதுரையில் அடுத்தடுத்தவார்டுகளில் நின்றநமதுவேட்பாளர்கள் இருவரைத் தோற்கடிக்க தி மு க வினரும் காங்கிரசாரும், பரஸ்பரம் வாக்குகளைக் கொடுத்து உதவிக்கொண்டது நமக்கு நன்கு நினைவில் இருக்கிறது!

# அமைச்சர்கள் முன் போலீஸ் அக்கிரமம் பெண்களின் சேலைகள் கிழிக்கப்பட்டன

பம்பாய், ஜன. 17—ரேஷன் கடைகளில் உணவுத் தானிய சப்ளையை குறைத்ததேன் என மகாராஷ்டிரா முதலமைச்சர் வி. பி. நாயக்கை கேட்கப் போன பெண்களிடம் போலீசார் மிருகத்தனமாக நடந்துள்ளனர்.

ஏற்கனவே பற்றுக்குறை தானியத்தை ரேஷன்கடைகளில் வழங்கி வந்த மகாராஷ்டிர மாநில அரசாங்கம் மேலும் சப்ளையைக் குறைத்தது.அரசாங்கத்தின் இந்நடவடிக்கையால் மென் மேலும் வெளிமார்க்கெட்டில் அதிக விலை கொடுத்து தானியம வாங்க வேண்டிய நிலை ஏற்பட்டுள்ளது. இதனுல், வாழ்க்கையில சுமை அதிகரிக்கிறது. குடும்பததை நிர்வகிக்கும் பெண்களுக்கு இது கஷ்டங்களை மேலும் அதிகரிக்கும் என்பதில் சந்தேகமில்லை.

எனவே பெண்களால் ஆரமபிக்கப்பட்ட்விலைவாசி எதிர்ப்புகமிட்டி, ரேஷன் அளவை குறைத்ததற்கு கடுமையான எதிர்ப்பு தெரிவித்தது.

எனவே விலைவாசிஉயர்வு எதிர்ப்பு கமிட்டியின் முக்கியமானவர்கள் முதலமைச்சரை சந்தித்து ரேஷன் அளவை குறைக்கக்கூடாது என வலியுறுத்த அரசாங்க தலைமையகத்துக்குச் சென்றனர்.

### திட்டமிடும் சூரப்புலிகள்

அப்போது அமைச்சர்களின் கூட்டம் நடைபெற்றுக்கொண்டிருந்தது. தங்களுடைய வாழ்க்கை நெருக்கடிபற்றி எடுத்துரைக்க பெண்கள் வந்துள்ளனர். எனத் தெரிந்தும் முதல் அமைச்சர் வெளியேவரவில்லை.

மக்களின் வரிப்பணத்தை தாறுமாருக செலவு செய்து காலமெல்லாம் சட்டசபைக் கூட்டங்களையும், அமைச்சரவைக் கூட்டங்களையும் நடத்தி திட்டமிட்டு நாட்டில் பதுக்கல் பேர்வழிகளையும், கள்ள மார்க்கெட் திருடர்களையும், வர்த்தகச் சூதாடிகளையும் கொழுக்க வைத்த இந்த சூரப்புலிகளுக்கு குடுமபப் பெண்களை பார்ப்பதற்கு நேரமிருக்காது அல்லவா?

25 ஆண்டுகள் ஆகியும் குறைந்தபட்சம் ரேஷன் கடைகளில் தேவையான அளவு தானியம் சப்ளை செய்ய முடியாத இந்த கேடுகெட்ட அமைச்சர்களுக்கு கூட்டம் ஒரு கேடா என்று அந்தப் பெண்கள் ஆத்திரம் கொண்டிருப்பார்களானல் அதில் ஆச்சரியமில்லை.

### போலீசாரின் காட்டுமிராண்டித்தனம்

விலைவாசி உயர்வு எதிர்ப்புக் கமிட்டியின் தலைவியான சோசலிஸ்ட் கட்சி எம். எல். ஏவான மினரல் கோரே, திருமதி சுகிலா படேல் ஆகியோரின் தலைமையில் வெளியே காத்திருந்த பெண்கள், அமைச்சர் வெகுநேரமாகியும் வராததால் தலைமையகத்துக்குள் நுழைந்து விட்டனர்.

உள்ளே நுழைந்து முதல் அமைச்சர் வி. பி.நாயக்கை சுற்றி நின்று கொண்டனர். வாழ்க்கையில் காங்கிரசு ஆட்சியின் தரங்கெட்ட நடவடிக்கைகளை எதிர்த்து பழகிய அப்பெண்கள் ரேஷன் அளவை குறைக்கக்கூடாது என்று கோஷமிட்டனர். முதலமைச்சர் வெளியே வரவேண்டும் என்றும் கூறினர்,

ஆனல், முதலமைச்சர் வெளியே வரவில்லை- அதற்குப் பதிலாக காவல்காத்து நின்ற போலீசார் மினரல் கோரே, சுசிலாபடேல்மற்ற ஏனைய பெண்களையும் பலாத்காரமான முறையில் இழுத்து வெளியே தள்ளியிருக்கின்றனர்.

அப்பெண்களில் ஒருவரின் சேலையை போலீசார் கிழித்து விட்டனர்.

### அமைச்சர்கள் உடந்தையா?

இத்தனையும் நாட்டைக் காக்கப் பிறந்த அமைச்சரின் முன்னிலையில்தான் நடந்திருக்கிறது. காவலுக்கு நின்ற போலீஸ்காரர்களின் மிருகத்தனமான நடவடிக்கைகளிலிருந்து அபபெண்களைக் காப்பாற்ற முடியாத அமைச்சர்கள் நாட்டைக் காக்க திட்டமிடுகிருர்களாம்.

அதுவும் பெண்களை அமைச்சரின் முன்னிலையிலேயே பலாத்காரமாக வெளியே தள்ள போலீஸ்காரர்களுக்கு எப்படி தைரியம் வந்தது? இழுத்து வெளியே தள்ளுமாறு போலீஸ்காரர்களுக்கு முதல்அமைச்சர் சைகை காட்டினுரா?

அப்பெண்களின் நியாயமான கேள்விகளுக்கு பதில் கூறமுடியாத அமைச்சர்கள் பிரச்சினையிலிருந்து தப்பிக்க எந்த முறையையும் கையாள்வார்கள்.

போலீசாரின் காட்டுமிராண்டித்தனமான நடவடிக்கைக்கு பொறுப்பான மகாராஷ்டிர மாநில உள்துறை அமைச்சர் மன்னிப்பு கோரவேண்டும் என்றும் போலீசாரால் தாக்கப்பட்ட பெண்கள் கோரினர்.

# தமிழ் நாட்டில் லேபர் கோர்ட்டுகளும் அதன் எல்லை வரம்புகளும்

சென்னை, ஜன. 16—சென்னை, மதுரை, கோவை முதலிய இடங்களில் உள்ள லேபர் கோர்ட்டுகளது அதிகார எல்லை வரம்புகள் குறித்து அரசிதழில் பிரசுரிக்கப்பட்டுள்ளது.

அதன்படி சென்னைலேபர் கோர்ட்டுகளின் எல்லை வரம்பு வருமாறு:—

சென்னை, செங்கற்பட்டு, தென் ஆற்காடு, வட ஆற்காடு, தஞ்சாவூர் முதலிய மாவட்டங்கள்.

மதுரைலேபர்கோர்ட்டின் எல்லை வரம்பு வருமாறு:—

மதுரை, இராமநாதபுரம், திருநெல்வேலி, கன்னியாகுமரி, திருச்சி, புதுக்கோட்டை முதலிய மாவட்டங்கள்.

கோவை லேபர் கோர்ட்டின் எல்லை வரம்பு வருமாறு:—

கோவை,நீலகிரி,தர்மபுரி, சேலம் மாவட்டங்களும், மற்ற மாவட்டங்களில் உள்ள தோட்டங்களும் ஆகும்.

இந்திய கமயூனிஸ்டு கட்சி (மார்க்சிஸ்ட்) தமிழ மாநிலக்குழு சார்பில் தீக்கதிர் அச்சகத்தில் (6-16 பைபாஸ ரோடு மதுரை-625018) அச்சிட்டு வெளியிடுபவர் ஆசிரியர் கே.முத்தையா.

# காங்கிரஸ் தயவில் பதவி வகிக்கும்போது வாயைத் திறக்கலாமா? அச்சுதமேனனுக்கு அந்தோணிகண்டனம்

திருவனந்தபுரம், ஜன. 17—காங்கிரஸ் கட்சியின் தயவில் முதலமைச்சர் நாற்காலியில் உட்கார்ந்திருப்பதற்குப் பெருமைப்படும் அச்சுதமேனனுக்கு அவமானத்துக்குமேல் அவமானம் ஏற்பட்டுவருகிறது.

ஒரு பக்கம் 6 அவுன்ஸ் உணவுபங்கீடு அளிக்க முடியாமல் பெரிய நெருக்கடி ஏற்பட்டிருக்கிறது. மறுபக்கம சீறும் மக்களை அச்சுதமேனன் அரசின் பக்கம திருப்பிவிட்டு தப்பித்துக்கொள்ள காங்கிரஸ் முயலுகிறது.

இந்த நிலைமையில் வாயைக்கூடத் திறக்கக் கூடாது என்று அச்சுதமேனனை கேரள பிரதேச காங்கிரஸ் கமிட்டித்தலைவர் அந்தோணி எச்சரித்துள்ளார்.

இளைஞர் காங்கிரசையும் ஐ.என்.டி.யூ.சி.யையும் மத்திய அரசாங்கத்தையும்பற்றி அச்சுதமேனன் கருத்து வெளியிட்டிருப்பதை அடாத செயலாகக் கருதி அந்தோணி பகிரங்கமாகக் கண்டித்துள்ளார்.

மக்களுடைய எதிர்ப்பு வரும்போதுஅச்சுதமேனன் அரசுதான் கையாலாகாத அரசு என்று இளைஞர் காங்கிரஸ் பிரச்சாரம்செய்கிறது. அச்சுதமேனன் அரசு பதவி விலக வேண்டும் என்றும் அது கோருகிறது. இதைக் கட்டுப்படுத்த கேரள பிரதேச காங்கிரஸ் கமிட்டித்தலைவர் முன் வரவில்லை. "அச்சுதமேனன் பொறுமையைக் கடைப்பிடிக்க வேண்டும்" என்று அந்தோணி கோரியுள்ளார். "முதலமைச்சரின் பேச்சுக்களைப் பற்றி என்னுடைய விமர்சனத்தைக் கூறவேண்டியிருக்கிறது. பின்னல் அந்த விமர்சனத்தைச் செய்யப்போகிறேன்" என்றும் அந்தோணி மிரட்டியுள்ளார்.

கேரளத்தின் கதவுகளைப் பஞ்சப்பேய் தட்டிக்கொண்டிருக்கும் போது போதிய உணவு சப்ளைகளை அனுப்பத்தவறியிருக்கும் மத்திய அரசைப்பற்றி "மத்திய அரசு நீதி வழங்கவில்லை" என்று கூறியதற்குத்தான் அச்சுதமேனன் மீது இத்தகைய கண்டனம் வந்துள்ளது.

காங்கிரஸ் கிழித்த கோட்டைத் தாண்டமாட்டேன் என்று கட்டுப்பட்டிருக்க வேண்டிய அச்சுதமேனன் வாயைத்திறந்தாலேஅதிகப்பிரசங்கித்தனம் என்று அந்தோணி கருதுகிருர், இந்த அவமானத்தை யெல்லாம் தாங்கிக்கொண்டுநாற்காலியில் உட்கார்ந்திருப்பதற்குத்தான் அச்சுதமேனனுக்கு எத்தனை ஆசை?

### மதுரை தாலுகாவில்...

)2ம் பக்கத் தொடர்ச்சி)

பேசினர்கள்.

விழா முடிவில் இனிப்பு வழங்கப்பட்டது. கொடியேற்று விழாவிற்கு திருவுழான் பட்டியிலுள்ள பெண்களும் ஆண்களும் நூற்றுக்கு மேற்பட்டோர் கலந்து கொண்டார்கள்.

மதுரை வடக்குத் தாலுகாவில் மாங்குளம், மாத்தூர், திருவுழான்பட்டி, வெள்ளியக்குன்றம், தேத்தாம்பட்டி ஆகிய கிராமங்களில் புதிதாக விவசாயிகள் சங்கத்திற்கு உறுப்பினர்கள் சேர்க்கப்பட்டு வருகின்றனர்.

## திருப்பூர் பகுதியில்..

(1-ம் பக்க தொடர்ச்சி)

2 மணிக்கு தோழர் பி. ராமமூர்த்தி அவர்களை வைத்துஊழியர்கூட்டத்தை திரட்டுவது என்றும், ஊழியர் கூட்டத்திற்கு தொகுதி முழுவதிலிமிருந்து ஆயிரம் பேருக்கு குறையாமல் ஊழியர்களைத் திரட்டுவது.

4) 137 சாவடிகளுக்கும பூத் கமிட்டிகளை அமைப்பது.

5) 26—1—74 திருப்பூர் டவுன்ஹாலில் தோழர் பி. ஆர். அவர்களை வைத்து மாபெரும் பொதுக்கூட்டம் நடத்துவது.

6) பாப்பா உமாநாத், கே. பி. ஜானகிஅம்மாள் ஆகியோரை அழைத்து பெண் ஊழியர்கள் கூட்டத்தை நடத்துவது.

இன்றுவரை தேர்தல் நிதி வசூல் ரூ. 2000ஐத்தை தாண்டி விட்டதாக பொருளாளர் மாரப்பன் கூட்டத்தில் அறிவித்தார்.

தோழர் தங்கவேலு தேர்தல் காரியாலயச் செயலாளராகதேர்வு செய்யப்பட்டனர்.

### விஷமிகள் சேட்டை பாலவினாயகம் எச்சரிக்கை

கே. என். பி. காலனியில் தோழர் அப்புக்குட்டி தலைமையில் மாபெரும் பொதுக்கூட்டம் ஜன. 14-ல் நடைபெற்றது. தோழர் அப்புக்குட்டி தலைமை தாங்கினர். கூட்டத்தில் கோவை மாவட்ட [சோஷலிஸ்ட்டு இளைஞர் முன்னணி தலைவர் காளியப்பன், திருப்பூர் பிர்க்கா கமிட்டி செயல் கே. எஸ். கருப்பசாமி பேசிய பின் தோழர் பாலவினாயகம் இண்டி, சிண்டி. வலது கம்யூனிஸ்ட் கட்சிகளின் மக்கள் விரோத நடவடிக்கைகளைப் பற்றி விரிவாகப் பேசினுர்.

தோழர் பாலவினாயகத்திடம் திருப்பூர் 22.23-வது வார்டு டவுண் கமிட்டி சார்பில் ரூ. 200-ம் கோட்டயக்காடு மக்கள் சார்பில் ரூ. 101-ம். பி. கே. ஆர். காலனி மக்கள் சார்பில் ரூ. 101-ம். மறறும் கலாஸ் தொழிலாளிகள சார்பில் ரூ. 17-ம் ஆக மொத்தம் தேர்தல் நிதி முதல் தவணையாகக் கொடுக்கப்பட்டது. பாலவினாயகத்திறகு ஏராளமான மலர் மாலைகள் பல்வேறு ஸ்தாபனங்களின்சார்பில் போடப்பட்டன. கூட்ட ஆரம்பத்தில், விஷமிகள் கூட்டத்தைநோக்கிஇரண்டு தடவை கற்களை எறிந்தார்கள்.

ஒவ்வொரு அடிக்கும், பலமான இரண்டு அடி திருப்பிக்கொடுக்க நெருப்பாற்றில் எதிர்நீச்சல் அடித்து முன்னேறிக் கொண்டிருக்கும் மார்சசிஸ்ட் கட்சியும் தொழிலாளி வர்க்கமும் தயங்காது என்று கல்லெறிந்த கோழைகளை பாலவினாயகம் எச்சரித்தார்.

### மக்கள் ஆதரவு திரளுகிறது

திருப்பூர், ஜன, 16—திருப்பூர் தொகுதி மண்ணறை கிராமத்தில் மார்க்சிஸ்ட் கட்சி ஆதரவாளர்கள் பேரவை கூட்டம் இ எம் எஸ் படிப்பகத்தில் ஜன 14-ல் நடைபெற்றது.

கூட்டத்தில் தோழர்கள் காளியப்பன், கோவை மாவட்டக் குழு உறுப்பினர் கே. முத்து, திருப்பூர் தொகுதி மத்திய தேர்தல் கமிட்டி உறுப்பினரும், பழம் பெரும் கட்சித் தோழருமான ராமசாமி.மார்க்சிஸ்ட் கட்சி நேல்லை மாவட்டச் செயலர் சு. பாலவினாயகம் ஆகியோர் கோவைத் தொகுதியில் மார்க்சிஸ்ட் வேட்பாளரை வெற்றிபெற செய்யும்படி வேண்டிக் கொண்டார்கள்.

மண்ணரையில் 80 சத வீதம் வாக்குகளை நம் வேடபாளருக்கு பெற்றுத் தருவதாக ஊர் மக்கள் உறுதி கூறினுர்கள்.

ந. நி,